# ஸ்ரீ ராமாநுஜன்—210







சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசனஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 18 | 5—5—66-ல் வெளியிடப்பட்டது. | ஸஞ்சிகை 6 |
|---|---|---|

## திருவரங்கம் பெரியகோயில் தென்னாசார்ய ஸம்ப்ரதாயஸம்ரக்ஷணஸபை.

*வன்பெரு வானகமுய்ய வமரருய்ய மண்ணுய்ய மண்ணுலகில் மனிசருய்யத் துன்பமிகு துயரகல அயர்வொன்றில்லாச் சுகம் வளர அகமகிழுந்தொண்டர்வாழ அன்பொடு தென்திசை நோக்கிப் பள்ளிகொள்ளுமணியரங்கனுடைய *தென்னாடும் வடநாடுந் தொழநின்ற திருவரங்கம் திருப்பதியே இந்நிலவுலகில் திகழும் ஸகல திவ்ய தேசங்களுக்கும் தலையான தென்னுமிடம் *அடியார்கள் வாழ அரங்கநகர் வாழ* என்றும் *ஸ்ரீரங்க ஸ்ரீச் ச வர்த்ததாம்* என்றும் உலகமெல்லாம் நிச்சலும் மங்களாசாஸனம் செய்து போருவதனால் அனைவருமறிந்ததாகும். ப்ரமாணங்களான வேதாதிகளுக்குப் பலவகையான உபப்லவங்கள் நேருவது போல ப்ரமேய ச்ரேஷ்டங்களான திவ்ய தேசங் களுக்கும் பலவகைப்பட்ட உபப்லவங்கள் நேருவதுண்டென்பது யாவர்க்கும் கட்கூடு. இங்ஙனே நேரும் திவ்ய தேசோபப்லவங்கள் ஸமய பேதேந பேதித்திருக்கும். நமது பூருவாசாரியர்களின் காலத்தில் நேர்ந்த திவ்ய தேச விபத்துக்கள் அபிதிஸ்தவாதிகளால் அறியக் கிடப்பதே. பிற்காலத்தில் ஸம்பவிக்கத் தொடங்கின விபத்துக்கள் நீதி மன்றங் களிலேறிப் பரிஹாரமடையத்தக்கவையாயின. “ஸ்ரீமந்! ஸ்ரீரங்கச்ரியமநுபத்ரவாம் ஸம்வர்த்தய” என்னுமல் இடையில் “அநுபத்ரவாம்” என்றொரு பதத்தைச் சேர்த்துப் பெரியார்கள் மங்களாசாஸனம் செய்யத் தொடங்கி அது அநுஸ்யூதமாகவும் நிகழ்ந்து வருகையாலே ப்ரதியோகியான உபத்ரவங்களும் ஸமூலோன்மூலன மடையாதே ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு விதமாகத் தோன்றுவதனால் அவற்றைக் கிள்ளிக்களைய வேண்டியும், “துன்பமிகு துயரகல அயர்வொன்றில்லாச் சுகம்வளர அகமகிழுந்தொண்டர் வாழ” என்கிற ஸ்ரீ குலசேகராழ்வாருடைய மங்களாசாஸனம் புஷ்கலமாக வேண்டியும். ஐம்பது ஆண்டுகட்கு முன்னே விசாலமநஸ்கர்களான பல பெரியார்கள் கூடி தீர்க்க தர்சிகளாய் ஸ்தாபித்த கோயில் தென்னாசார்ய ஸம்ப்ரதாய ஸம்ரக்ஷணஸபையானது

எதிலும் எவ்விதமான குறைபாடுமின்றி தத்தத்காலோசித கர்த்தவ்யங்களைச் செவ்வனே நிர்வஹித்து வருவது பல்லாண்டு பாடுதற்குரியது.

இந்த ஸபையின் பொன்விழாக் கொண்டாட்டத்தை ஒரு மஹோத்ஸவம் போல நடத்தக் கருதிய வைதிக லௌகிக மஹநீயர்கள் நிகழும் சித்திரை மீ 22 தேதி முதல் நான்கு நாட்கள் (5-5-66 To 8-5-66) திருவிசாகம் தொடங்கித் திருமூலம்வரைவாகத் திருவரங்கம் பெரியகோயிலில் மணவாளமாமுனிகள் ஸந்நிதியில் ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி திருமலை திருப்பதி பெரிய ஜீயர் ஸ்வாமியின் ஆத்யக்ஷ்யத்தில் நடைபெறுத்த நிச்சயித்திருக்கும் நற்செய்தியை நாடுநகரமும் நன்கறிந்து மகிழச் செய்கிறோம். குறிப்பிட்ட நான்கு நாட்களிலும் பலபல வித்வான்களின் அரியபெரிய சொற்பொழிவுகள் கர்ணாம்ருதமாக ப்ராப்தமாகும். "குழாங்களாய் அடியீர்! உடன் கூடி நின்றாடுமினே."

இந்த மஹோத்ஸவ வ்யாஜேந நமது தென்னாசார்ய ஸம்ப்ரதாய ஸாரார்த்த விசேஷங்களை யெல்லாம் ஸகல பூர்வாசார்ய ஸ்ரீ ஸூக்தி ஸர்வஸ்வமாக ஸ்ரீ வைஷ்ணவ வுலகம் அநுபவிக்க "ஸத்ஸம்ப்ரதாய ஸாரார்த்தரக்ஷா" என்னும் க்ரந்தத்தை இரண்டு பரிச்சேதங்கள் கொண்டதாக இயற்றி ஸ்ரீ ராமாநுஜன் மூலமாக வெளியிடத் தொடங்குகின்றேன். இப்போது இதில் முதல் பரிச்சேதம் மட்டும் வெளிவருகின்றது. அடுத்த பரிச்சேதம் க்ரமேண வெளிவரும். இந்த முதல் பரிச்சேதத்தில் விவரிக்கப்பட்டுள்ள விஷயங்கள் மட்டுமே போதும் தென்னாசார்ய ஸம்ப்ரதாய ஸாராம்சங்களை யுணருவதற்கு. இவ்விஷயங்களை ஆழ்ந்து அறிந்து நெஞ்சிலே தேக்கிக்கொள்ள வல்லவர்களுக்கு ஸ்ரீமந் நிகமாந்த மஹா குருவின் உண்மையான நிலை உணரப்பெற்றதாகும். அவ்வாசாரியருடைய ஸூக்திகளில் சிலருக்குள்ள வைமத்யம் விலகும். பலர் அவருடைய நூல்களைப் பாராமலே அவரை வேறு ஸம்ப்ரதாயஸ்தராக நினைத்து வெறுப்புக் கொள்வது மிகவும் தவறு. ஸ்ரீவசனபூஷண ஆசார்ய ஹ்ருதயங்களுக்கும் இவற்றுக்கு மூலமான ஈடு முப்பத்தாறாயிரப்படிக்கும் உயிர் நிலையான அர்த்தம் எதுவோ, அவ்வர்த்தத்தைச் சுவடறிந்து நன்கு போஷித்தவர் வேதாந்தவாசிரியர் என்கிற தத்துவத்தையே அடியேனுடைய எந்த நூலும் மூதலிக்கும். இத்தால் அவர்க்கு அபிப்ராய பேதமே கிடையாதென்று தெரிவித்ததாக ஆகாது. இதைப்பற்றி மேலே முன்னுரையில் விளக்கமாகக் கண்டுகொள்க. ... ❁

---

ஸ்ரீ ராமாநுஜன் நெ. 199-ல் தொடங்கி 208-ல் தலைக்கட்டின உபந்யாஸ சதத்வயத்தை [இருநூறு உபந்யாஸங்களை]ப்பற்றி 26-4-66ல் வெளிவந்த தினமணிப் பத்திரிகை வெளியிட்டிருக்கும் மதிப்புரை வருமாறு:—

## "உபந்யாஸ சதத்வயம்"

[ஸ்ரீ ராமாநுஜன் சிறப்புமலர். விலை ரூ. 4-00. கிடைக்குமிடம்: ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர், சின்னகாஞ்சீபுரம்.] பதினேழு ஆண்டுகட்குமுன் ஸத்கிரந்தப்ரகாசன சபையார் மகாவித்வான் ஸ்ரீ ப்ரதிவாதி பயங்கரம். அண்ணங்கராசார்ய ஸ்வாமியை ஆசிரியராகக்கொண்டு "ஸ்ரீ ராமாநுஜன்" என்னும் மாத சஞ்சிகையைத் தொடங்கினார்கள். அதில் முதல் கட்டுரை ஸ்ரீ ராமாநுஜரின் வாழ்க்கை வரலாற்றைப் பெரும்பூதூர் மாமுனிவன் என்ற

மகுடமிட்டுப் பொருத்தமாக அமைந்தது. இத்தனை ஆண்டுகளாக மாதந்தவறாமல் வெளிவரும் இச்சஞ்சிகை ஸ்ரீ ராமாநுஜரையும் அவருக்குப்பின்வந்த ஆசாரியர்களையும் தமிழ் கூறும் நல்லுலகுக்கு விளக்கி வருகிறது. ஸம்ஸ்கிருதம், தமிழ் இரண்டு மொழிகளிலும் சிறந்த நூல்கள் அனைத்திலும் ஆழ்ந்த புலமைவாய்ந்து நடமாடும் நூல் நிலையமாக விளங்கும் ஆசிரியர் தாமே பற்பல வியாசங்கள் எழுதி வெளியிட்டு வருகிறார். உடல்நலக்குறைவோ பணமுடையோ தலையிடாமல் மாதந்தவறாது சஞ்சிகை வெளிவருகின்றது. சமீபகாலமாக ஆசிரியர் பிறந்தநாள் விழாவில் சாஸ்திர சம்பந்தமான சிறப்புக் கட்டுரைகள் எழுதி வாசகர்களை மகிழ்வித்து வருகிறார். சஞ்சிகையின் இரு நூறாவது வெளியீட்டு விழாவாக ஆசிரியர் இரு நூறு உபந்யாஸங்கள் எழுதி வெளியிட நினைத்தார். அவை சஞ்சிகையின் 199 முதல் 208 வரை உள்ள வெளியீடுகளாக ஒரே கட்டமாக வெளிவந்துள்ளன. முதல் உபந்யாசம் நாம் பெற்ற பாக்ய விசேஷங்கள். அதை அடுத்து நித்திய நைமித்திக கடமைகள், வேத பாராயண மகிமை, வேத பாஷ்யங்களின் பெருமை, மரணத்துக்குப்பின் ஆன்ம வாழ்க்கையைப்பற்றி ஒரு அழகான உபந்யாசம். சில உபந்யாசங்களில் வியாசர் வால்மீகி தொடங்கி இன்று நம்முடன் வாழும் பண்டித சிகாமணிகள் ஈறாகப் பல பெரியோர்களின் வாழ்த்தாக உள்ளது. இவ் இருநூற்றில் ஐம்பத்துநாலு உபந்யாசங்கள் ஸ்ரீ அஹோபிலத்தில் நடைபெற்ற ராஜகோபுர சம்ப்ரோக்ஷண மஹோத்ஸவத்தில் நடைபெற வேண்டியவை எனக்கருதலாம். இவை எல்லாம் கருத்துச்செறிவுடையவை. இஜ்யையைப்பற்றின உபந்யாசத்தில் ஸ்ரீவைஷ்ணவர் தினசரி காரியக்ரமம் விவரிக்கப்படுகிறது. (1) ஸ்நாநம், ஸந்தியாவந்தனம் அபிகமனம் (2) பூஜா திரவியங்கள் சேகரித்தல். உபாதானம் (3) மாத்யான்னிக ஆராதனம் விருந்தோம்பல், இஜ்யை (4) வேதாந்த படனம் போதனை ஸ்வாத்யாயம் (5) ஸாயம் ஸந்தியா வந்தனம். போஜனம், படுக்கை, யோகம். சில உபந்யாசங்கள் ஸ்ரீ பாஷ்ய வாக்யார்த்தங்களாக அமைந்துள்ளன. திருமங்கை ஆழ்வார் பெரிய திருமொழி 1-7 (1-10) வரை தி. அ. ஸம்பத்குமாராசார்யரது ஆங்கிலமொழிபெயர்ப்பும் அதற்கு ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்யரது ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பும் நடுநாயகமாய் உள்ளன. வேங்கடாத்ரி வைபவம் என்றொரு உபந்யாசமும் ஸம்ஸ்க்ருதத்திலேயே உள்ளது. ஸ்ரீ பாஷ்யத்தைப் பற்றின பதினெட்டு. உபந்யாசங்கள் ஆசிரியரின் கல்வி ஆழத்தையும் தர்க்கத் திறனையும் காட்டுகின்றன. இராமாயணம் ஐந்து உபந்யாசங்களும், பாகவதம் இருபத்தெட்டு உபந்யாசங்களும் இராமகிருஷ்ணாவதாரங்களின் ஒற்றுமை பத்து உபந்யாசங்களும் உள்ளன. ஆசிரியர் தாமே அமைத்து திருமஞ்சனகாலங்களில் திருக்கோயில்களில் ஓதிவரும் திருமஞ்சனக்கட்டியங்கள் பன்னிரண்டு உள்ளன. பக்தர்கள் இவற்றை மனப்பாடஞ்செய்து, தம் இல்லங்களில்கூட பூஜா காலங்களில் சேவிக்கலாம். ஈற்றில் திருப்பாவையிலிருந்து ஆழ்வார் பதின்மரைப் பற்றிய உபந்யாசங்கள் பத்து உள்ளன. ஆசிரியர் வாதத்திறமையைக் காட்டுவனவாக அமைந்தவை பல. பழங்காலந்தொட்டே சர்ச்சையாக நிலவிவரும் திருமண்காப்பு, சரணாகதி, பிரபத்தியுபாயங்கள் பற்றிய உபந்யாசங்கள், எதிர்க் கட்சிகளை வாயடக்குவன. ஆசிரியரின் வசன நடையும், சொல் ஆட்சியும் கவனத்துக்குரியன. வைஷ்ணவத் தமிழில் கைவந்தவர் என்பது நன்கு விளங்குகிறது. புஸ்தகம் பெரிய எழுத்தில் பாங்குற அச்சிட்டு கிழியாத கட்டடமாக பைண்டு செய்து மலிவுவிலையில் உள்ளது. வைஷ்ணவத்தை ஐயந்திரிபற அறிந்து கொள்வதற்கு இந்நூல் உதவும் என்று சிபாரிசு செய்கிறோம். —ஏ. டி. கிருஷ்ணமாசாரி."

— இது தினமணியின் மூலமாக வெளிவந்தது. —

ஸ்ரீரஸ்து.

கோயில் தென்னாசார்ய ஸம்ப்ரதாய ஸம்ரக்ஷண ஸபையின்

# பொன்விழாக் கொண்டாட்டம்

5—5—66 to 8—5—66 நடைபெறவிருப்பதற்கு நீடூழி நினைவு

மலராக

ஸ்ரீகாஞ்சீ. ஜகதாசார்ய ஸிம்ஹாஸநாதிபதி ப்ரதிவாதிபயங்கரம்

## அண்ணங்கராசாரியர்



— எழுதி வெளியிட்ட —

# ஸத்ஸம்ப்ரதாய ஸாரார்த்த ரக்ஷையின்

## முதல் பரிச்சேதம்

— நூறு பாராக்கள் கொண்டது —


ஸ்ரீராமாநுஜன் வெளியீடு 210

சென்னை ரத்தினம் (கிளை) அச்சகத்தில் அச்சிடப்பட்டது.

இது கிடைக்குமிடங்கள்:

1. P. B. Annangaracharya, L. Kancheepuram.
2. S. G. P. Sabha, 213, Govindappa Naick St, Madras-1.
3. Srirangam Thennacharya Sampradaya Samrakshana Sabha.

5—5—1966 [விலை 1 ரூபா

ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.







**கோயில் தென்னாசார்ய ஸம்ப்ரதாய ஸம்ரக்ஷண ஸபையின்**
**கோல்டன் ஜூபிலியென்னும் பொன்விழாக் கொண்டாட்டத்திற்கு**
**நீடூழி நினைவுமலராக**

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதி பயங்கரம் **அண்ணங்கராசாரியர்**

எழுதி வெளியிட்ட

## — தென்னாசார்ய —

# ஸத்ஸம்பிரதாய ஸாரார்த்த ரக்ஷா.

### — முன்னுரை —

ஸாம்ப்ரதாயிக வ்யவஹாரங்களில் தென்னாசார்யர்களென்றும் தென்னாசார்ய ஸம்பிரதாயமென்றும் வ்யவஹாரமுள்ளது ஜகத்ப்ரஸித்தம். இதற்கு ப்ரதிகோடியாக வேறொரு வ்யபதேசம் ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டியில் நிகழ்ந்திருக்கவில்லை. நமது ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாய ப்ரவர்த்தகர்களான ஸ்ரீமந்நாதமுனிகள் ஆளவந்தார் எம்பெருமானார் முதலான ஆசாரியர்களனைவரும் தென்னாசார்யர்களென்கிற வ்யபதேசத்திற்கே இலக்கானவர்கள். எம்பெருமானார்க்குப் பிற்பட்டவர்களான நிகமாந்தகுருவரர் மணவாளமாமுனிகளீறாகவுள்ள ஸகலாசார்யர்களும் தென்னாசார்ய ஸம்பிரதாயஸ்தர்களென்கிற வ்யபதேசத்திற்கு இலக்கானவர்களே. ஆழ்வார்களருளிச் செயல்களில் ஊற்றமுள்ள ஸ்ரீவைஷ்ணவாசாரியர்களனைவரும் தென்னாசாரியர்களே. திவ்யஸூரிகளிடத்தில் பக்தியும் திவ்யப்ரபந்தங்களில் ப்ராவண்யமும், திவ்ய தேசங்களில் அபிநிவேசமுமற்ற ஸ்மார்த்த மாத்வ ஸம்ப்ரதாயஸ்தர்களே தென்னாசார்ய ஸம்ப்ரதாயஸ்தர்களென்னும் வ்யபதேசத்திற்கு ப்ரதிகோடியானவர்களென்பர் பெரியோர். இதைப்பற்றி இவ்விடத்தில் விரிவு வேண்டாவென நினைக்கிறேன். பல திவ்ய தேசங்களில் மற்றையாசாரியர்களோடொப்ப ஸ்ரீமந்

நிகமாந்தாசார்யரும் ஸம்ப்ரதாய பேதமின்றிக்கே ஒருகோர்வையாக விக்ரஹப்ர திஷ்டை பெற்று ஆராதிக்கப்பட்டு வருவதனுலும், இதில் வேற்றுமை காட்டப் படுவது அதிநவீனகாலந் தொடங்கியே யாதலாலும் அவ்வாசாரியருமுட்பட ஸகல ஆசாரியர்களும் தொன்றுதொட்டுத் தென்னுசாரியர்களே யென்பதை யாரும் மறுக்ககில்லார். திவ்யஸூரி திவ்ய தேச திவ்யப்ரபந்தங்களில் இடையருத அந்வயம் பெருதவர்கள் தங்களைத் தென்னுசார்ய ஸம்பிரதாய பஹிர்ப்பூதர் களாக நினைத்துக் கொண்டால் இதில் அநௌசித்யம் நினைக்க அவகாசமில்லை. "த்வசந ரங்கமுக்யே விபோ! பரஸ்பரஹிதைஷிணும் பரிஸரேஷு மாம் வர்த்தய" (அபீதிஸ்தவே) என்று மிகுந்த ஆர்த்தியோடு பிரார்த்தித்து, கோயிலில் அக்காலத் தில் வாழ்ந்த ஆசாரியர்களின் திருவடி நிழலில் ஒதுங்கி வாழ்ந்து ரஸிகமஹித-ரங்காஸ் தாந வித்வத் ஸேவா விமலமநஸ்கராகத் தாமே தம்மை ப்ரஸித்தப்படுத்திக்கொண்டு விளங்கின வேதாந்தவாசிரியரை இக்காலத்தவர்கள் சிலர் வேறு வகுப்பினராக்கப் பார்த்தாலும் அவர் ஆகார்.

அவருடைய ஸ்ரீஸூக்திகள் பெரும்பாலும் தென்னுசார்ய ஸ்ரீஸூக்திகளைத் தழுவியே அவதரித்துள்ளன வென்பதை அடியேன் ஏற்கெனவே பலநூல்களில் பலபாஷைகளிலும் விவரித்திருப்பதை உலகமறியும். இந்நூலிலும் ப்ரஸக்தி நேருமிடங்களில் நிரூபிக்க ப்ராப்தமாகும். இது ஏறிட்டுச் சொல்லப்படுகிற தென்றுவது, அஸங்கதமான நிருபணமென்றுவது இதுகாறும் ஒருவரும் ப்ரத்யவஸ் தானம் செய்திருக்கவில்லை. செய்யவும் போகாது. சிற்சில விஷயங்களில் அபிப்ராய பேத முண்டாவது வித்வான்களுக்கு ஸஹஜம். அத்தகைய அபிப்ராயபேதம் க்வசித் க்வசித் இருப்பதை நாமுமிசைவோம். பரமாணுவைப் பர்வதமாக்குகிற கணக்கிலே அதை பஹூகரித்து மாச்சரியத்தை வளர்த்திப்போருவது ப்ராமாணிக க்ருத்யமாகாது. வேதாந்தவாரியர்க்குச் சிற்சில விடங்களில் விளைந்த அபிப்ராய பேதமும் நிலைத்திருக்கவில்லை. சிலவிடங்களை இதற்கு நிதர்சனமாகக் காட்டுகிறேன்.

ஸ்தோத்ர ரத்நத்தில் "மம நாத! யதஸ்தி யோஸ்ம்யஹம்....அதவா கிம் நு ஸமர்ப் பயாமி தே?" என்றவிடத்து பாஷ்யத்தில்—கீழ் *வபுராதிஷு* என்ற ச்லோகத்தில் *அஹமத்யைவ மயா ஸமர்ப்பித:* என்று செய்யப்பட்ட ஆத்ம ஸமர்ப்பணம் அடுத்த *மம நாத! யதஸ்தி* இத்யாதியில் அநுசயபூர்வகம் ப்ரதிக்ஷேபிக்கப்படுவதாய்ச் சில ஆசாரியர்கள் திருவுள்ளம் பற்றுவதாக எடுத்துக்காட்டி மறுக்கப்பட்டிருப்பதைக் காணலாம். முன் சுலோகத்தில் செய்த ஆத்ம ஸமர்ப்பணத்தைப்பற்ற அநுசய மென்பது அஸம்பாவிதம் என்றும், தத்விவரணமே இதில் செய்யப்படுகிறதென்றும் இங்கே காட்டப்பட்டது. ரஹஸ்யத்ரயஸாரத்தில் ஸாங்கப்ரபதநாதிகாரத்தில் "இஸ் ஸமர்ப்பணத்தைப்பற்ற அநுசயம் பண்ணிற்றும்" என்கிறஸ்ரீஸூக்தியாலேஅநுசய மென்றே நிர்ணயித்தாராயிற்று. அநுசயமன்றென்றதற்கு அநுசயம் காட்டினபடி.

(2) சரமச்லோகத்தில் ஏகசப்தார்த்தமருளிச் செய்யா நின்ற பிள்ளை லோகா சாரியர் "இத்தால் வ்ரஜ என்கிற ஸ்வீகாரத்தில் உபாயபாவத்தைத் தவிர்க்கிறது" என்றருளிச்செய்தார். இதை ரஹஸ்யத்ரயஸார சரமச்லோகாதிகாரத்திலே மறுத்

துரைத்தார். ஸாரஸார ரஹஸ்யத்திலே சரமச்லோகாதிகாரத்திலே முமுக்ஷுப் படியைத்தழுவியே யெழுதி வைத்தார். ஸாரஸார மென்பது ரஹஸ்யத்ரயஸாரத்தின் ஸாரமென்கிற பொருள் கொண்டது. ரஹஸ்யத்ரய ஸாரத்தில் மறுக்கப்பட்ட அர்த்தம் தத்ஸாரத்தில் ஸ்தாபிக்கப்படுகிற தென்பதை எளிதிலுணரலாம். உணர்ந்தால், ஏதோ காரணவிசேஷத்தால் தமக்குண்டாகும் அபிப்ராய பேதத்தைத் தாமே மாற்றிக்கொள்ளுகிற பரமப்ராமாணிகர் நம் வேதாந்தவாசிரிய ரென்றுணரலாம். கிம்பஹுநா? வேதாந்தவாசிரியருடைய ரஹஸ்ய நூல்களில் மூவகையான ப்ரக்ரியைகளைக் காணலாம். (1) பூர்வாசார்ய ரஹஸ்யங்களில் கண்ட பொருள்களில் சிலவற்றை அநுபந்நமென்று கண்டிப்பது ஒரு ப்ரக்ரியை. (2) கண்டித்ததாகக் காட்டிக்கொள்ளாமலே வேறோரிடத்தில் அப்பொருளையே [தாம் கண்டித்த பொருளையே] ஸ்வஹஸ்தேந எழுதி வைத்தல். (3) முன்னம் தாமே கண்டித்ததைத்தாமே பிறகு தழுவுவது அபஹாஸ்யமாகுமேயென்று கருதி "அப்படியருளிச் செய்தவர்களுக்கு இப்படியபிப்ராயம்" என்று வழிவிடுதல்.

(3) இங்ஙனே, முதலில் ஒருவகையபிப்ராயம் காட்டுவதும் பிறகு தாமே அதை மாற்றிக்கொள்வதுமான விடங்கள் பலவுண்டு. இதற்கு மிக முக்கியமாக ஒரு விஷயம் காட்டி இதனை முடிக்கிறேன். உபேயம் என்று ஒன்றும், உபாயம் என்று ஒன்றும் வழங்கப்பட்டு வருவதை யாவரும் அறிவர். உபேயம், ப்ராப்யம், பலன் என்றிவையெல்லாம் பர்யாயங்கள். உபாயம் ஸாதனம் ஹேது என்றிவை யெல்லாம் பர்யாயங்கள். ஒரு உபேயத்தைப் பெறுவதற்கு ஒன்று அல்லது பல உபாயங்கள் வேண்டியிருக்கும். உபாயமில்லாமல் உபேயம் ஸித்திப்பது அரிதன்றோ. ஒருவன் ஒரு க்ராமப்ராப்தியை உபேயமாகக் கொண்டால் சகடகமநாதிகளை உபாயமாகக் கொள்ளக் காணுகின்றோம். இப்படியெங்கும் கண்டுகொள்ளலாம். இந்த ரீதியில் மோக்ஷப்ராப்தியை உபேயமாகக் கொண்டால் அதற்கொரு ஸாதனம் இருந்தே தீரவேணுமென்னுமபிப்ராயத்தைச் சிக்கனக்கொண்டு 'உபேயமும் அவனே, உபாயமும் அவனே' என்றறுதியிட்ட ஆசாரியர்கள் மீது அம்பு தொடுக்கும் முறையிலே சில விடங்களில் ப்ரத்யவஸ்தானங்கள் பண்ணியிருப்பதுண்டு. ஆனால் இவ்வபிப்ராயம் நிலைநின்றிருக்கவில்லை. க்ரமேண விமர்சிக்க விமர்சிக்க, "உபாயோபேயத்வே ததிஹ தவ தத்வம் ந து குணௌ" என்கிற பட்டர் ஸ்ரீஸூக்தி முதலானவற்றைச் சிந்தனை செய்ய நேர்ந்து கீதார்த்த ஸங்க்ரஹ ரக்ஷையில் [அதாவது ஆளவந்தாரருளிச்செய்த கீதார்த்த ஸங்க்ரஹ மென்னும் க்ரந்தத்திற்குத் தாமிட்டருளின வியாக்கியானத்தில்] * நிஜகர்மாதிபக்த்யந்தம் குர்யாத் ப்ரீத்யைவ காரித:, உபாயதாம் பரித்யஜ்ய ந்யஸ்யேத் தேவே து தாம் அபி: * (31) என்கிற சுலோகத்தின் விவரணத்தில் "முக்தவ்யாபாரந்யாயேந ஸ்வயம் ஸ்வாதுத்வாத் க்ஷணிகஸ்ய காலாந்தரபாவி பலஸாதநத்வாநுபபத்தி தர்சநாச்ச நாஸ்ய ஸ்வவ்யாபாரே மோக்ஷோபாயதாபுத்திரபி ஸ்யாத் இதி பாவ:" என்றருளிச் செய்தார். இங்கு, 'நாஸ்ய ஸ்வவ்யாபாரே மோக்ஷோபாயதா புத்திர் யுக்தா" என்றெழுதலாமாயிருக்க "மோக்ஷோபாயதாபுத்திரபி ந ஸ்யாத்" என்றெழுதியிருப்பதன் சுவையை ஆரேயறிவார். இந்த வொரு வாக்யத்தாலே உபாயவிஷயமாகத் தாம் ஆங்காங்கு எழுதிவைத்த மறுப்பு வாக்கியங்கள் யாவும் ப்ரதிக்ஷிப்தங்களென்பதை ஸம்சய விபர்யயமறவுணரலாம்.

இதற்குமேல் ஆச்சரியமான,வொருவிசேஷம் கேளீர். ஸ்வவ்யாபாரத்தில் உபாயத்வத்தைக் கொள்ளாமல் அந்த வுபாயத்வத்தை எம்பெருமான் பக்கலிலே நிக்ஷேபிக்க வேணுமென்று ஆளவந்தார் ஸாதித்தார்; அதற்குச் சேர வேதாந்தவாரியர் வியாக்கியானமிட்டார். பிறகு அதையும் சிறிது ஆராய்ந்தார். ஒருவஸ்து உபாயமாக இருந்தால் அதன் தன்மை எப்படிப்பட்டதாயிருக்கவேணுமென்னில் "நதீநிஸ்தரணாநந்தரம் ப்லவபரித்யாகம் போலே" என்று மணவாள மாமுனிகளருளிச் செய்த கணக்கிலே உபேயம் ஸித்தித்தவனந்தரம் உபாயம் த்யாஜ்யமாக இருக்கும். ஆகவே எம்பெருமானை உபாயமாகக் கொண்டால் கீழ்ச்சொன்ன நியாயத்தாலே அவனையும் ஒருகால் த்யஜிக்கவேண்டிவருமோவென்று கருதி எம்பெருமானையுங்கூட உபாயமென்ன ஸஹியாத சில மஹான்களிருப்பதாக ந்யாஸதிலகத்தில் (11.) "த்வத் கைங்கர்ய ப்ரவணமநஸ: த்வத்குணாஸ்வாத மத்தா:, த்வய்யேகஸ்மிந்நபி விஜஹதோ முக்தவத் ஸாதநத்வம்" என்றருளிச்செய்தார். இதில் * **த்வயி ஏகஸ்மிந்நபி முக்தவத் ஸாதநத்வம் விஜஹத:*** என்றருளிச்செய்த சுவை மிகமிக ரஸிக்கத்தக்கது. 'ஸ்வவ்யாபாரங்களிலே ஸாதநத்வத்தைத் தள்ளி அதை எம்பெருமானிடத்தில் நிக்ஷேபிக்க வேணுமென்றார்கள் ஆசார்யர்கள்; உபாயம் என்கிற சொல்லே அருவருக்கத்தக்கதாதலால் எம்பெருமானையுங்கூட உபாயமென்ன ஸஹியாதவர்கள் [ஸூரயோ மே ஸ்வதந்த்ராம்] எனக்கு ருசிக்கக் கடவர்கள் என்று இங்ஙனே பணித்த வேதாந்தவாசிரியர் "உபாயம் உபாயம், உபாயாநுஷ்டாநம் ஸாதநாநுஷ்டானம்" என்று உருப்போடுகிற வகுப்பினர்க்குத் தலைவராயிருக்க எங்ஙனே முடியும்? அவர் தென்னாசாரியர்களில் தலைவரேயாவர் என்றுமுழுமனமாக விசைந்து கைகூப்பி நிற்க வடுக்கும் ப்ராமாணிகர்களுக்கு.

எம்பெருமானுடைய வ்யாப்தியில் வஸ்துதோறும் பரிஸமாப்ய வர்த்தித்தல் என்பது ஒரு பெரிய விஷயம். இதைப்பற்றி ரஹஸ்யத்ரயஸாரத்தில் சர்ச்சை செய்யுமிடத்து பூர்வாசார்யர்களின் கொள்கைக்கு இணங்காதபடி ஸாதித்து, அதை ந்யாய ஸித்தாஞ்ஜநத்தில் தாமே கண்டித்துப் பூர்வாசார்யர்களின் திருவுள்ளத்தை ப்ரஹ்மஸூத்ர விசேஷ நிர்ணயத்தைக்கொண்டு ஸ்தாபித்தருளினரென்பதை அடியேன் ப்ரஹ்மவ்யாப்தி பரிஷ்க்ரியா க்ரந்தத்தில் பேர்க்கவும் பேராதபடி நிரூபித்திருப்பதை உலகமெல்லாமுணரும். இதிலும் மேலே நிரூபிக்கநேரும்.

ஆக, ஹேதுவிசேஷங்களாலே தோன்றின சில அபிப்ராய பேதங்களையும் க்ரமேணமாற்றிக்கொண்டவராகத் தேறுகின்ற நிகமாந்த மஹாகுருவுட்பட ஸகலாசார்யர்களும் தென்னாசாரியர்களே யென்னத் தட்டில்லை. இவர்கள் சேமித்தருளின மஹார்த்தநிதிகளை இச்சிறு நூலில் ப்ரமாணோபபத்தி புஷ்கலமாக நிரூபிக்கும் முகத்தாலே ஸ்ரீ ரங்கஸபையின் பொன்விழாக் கொண்டாட்டத்தில் ஒருவாறு கிஞ்சித்கரிக்க வெழுகின்றேனடியேன். .... ... .... .... *

(முன்னுரை முற்றும்.)

# தென்னாசார்ய ஸித்தாந்தத்தின் உள்ளுறை

1. விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திற்கு ஒரு திறவுகோலும், தென்னாசார்ய ஸித்தாந்தத்திற்கு ஒரு திறவுகோலும் முக்கியமாகத் தெரிந்துகொள்ளத் தக்கவை. சரீராத்மபாவம் என்பது விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத் திறவுகோல். 'ஸர்வேச்வரன் ஸகல சேதநா சேதநங்களையும் சரீரமாகக் கொண்டவன்' என்கிற உண்மையைச் செவ்வனே தெரிந்து கொள்ளும் வேதாந்திக்கு ஸகல உபநிஷத் வாக்யங்களும் எளிதாக அந்வயித்துவிடும், ஒன்றிலும் ஒரு வகையான அநுபபத்தியும் தோன்ற மாட்டாது—என்பது சீரியதோர் கொள்கை. இதை நன்கு தெரிந்துகொண்ட வித்வான் முன்னிலையில் எந்த மதாந்தரஸ்தனும் பங்கமடைந்தே தீர்வன் என்கிறார் வேதாந்தவாசிரியர்—* யத்யேதம் யதிஸார்வபௌமகதிதம் * இத்யாதியான ஸ்ரீ ரஹஸ்யத்ரயஸார ச்லோகத்தினால். அதுபோல, ப்ரக்ருதத்தில் "எந்த விதத்திலும் எம்பெருமானுடைய பெருமையிலேயே முழுநோக்கு" என்பதே தென்னாசார்ய ஸித்தாந்தத்தின்ஸாரம் என்று தெரிந்து கொள்ளவேண்டும். இதுவே இந்த ஸம்பிரதாயத்திற்குத் திறவுகோல். இதர ஸம்ப்ரதாயங்களில் சேதநனுக்கே [சேதனர்களின் ப்ரவ்ருத்திக்கே] ஆதிக்யம் தெரியவரும். இந்த ஸம்ப்ரதாயத்தில் அப்படியன்றிக்கே ஸர்வேச்வரனுடைய ப்ரவ்ருத்திக்கே ஸர்வாத்மநா ஆதிக்யம் தெரியவரும். இதனை முதலில் ஸுப்ரஸித்தமான வொரு அநுஷ்டானத்தினால் நன்கு தெரிவிக்கின்றேன்.

2. இந்த ஸம்ப்ரதாயஸ்தர்கள் ஒருதடவை நமஸ்காரம் செய்வதென்றும் பிறர் பலதடவை நமஸ்காரம் செய்வதென்றும் காண்கின்றதன்றோ. பகவானை நமஸ்கரிப்பதென்பது மிகச்சிறந்ததொரு காரியமே. இதனை ஒருதடவைக்குப் பலதடவையாகச் செய்தால் நல்லதல்லவென்று யாரேனும் நினைக்க முடியுமோ? நமஸ்கரிப்பவனுடைய கரணக்ராமமும் க்ருதார்த்தமாய் நமஸ்கரிக்கப்படுபவனான எம்பெருமானுடைய திருவுள்ளமும் ஸுப்ரஸந்நமாவதற்கு உறுப்பான காரியமன்றோ இது. அப்படியிருக்க, ஒருதடவைதான் நமஸ்காரம் செய்யவேணுமென்று ஒரு விரதமாகக் கொண்டிருக்கவேண்டிய அவசியம் என்ன? என்று ஒவ்வொரு விவேகிக்கும் இந்த சங்கை தோன்றும். இங்குத் தென்னாசார்யர்களின் திருவுள்ளம் கேண்மின். நம்மைப் பார்த்தால் நாம் எத்தனை தடவை நமஸ்கரித்தாலும் போராது. எம்பெருமானைப் பார்த்தால் ஒருதடவை நமஸ்கரிப்பதும் மிகையாகும். அப்பெருமான் கீதை முதலியவற்றில் தன்னை அல்ப ஸந்துஷ்டனாகச் சொல்லிக்கொள்ளுகிறான். * பத்ரம் புஷ்பம் பலம் தோயம் * இத்யாதிகள் அவனுடைய அமுத மொழிகளாகக் காண்கின்றன. தேவதாந்தரங்கள் மிகவும் ச்ரமப்பட்டு ஆராதிக்கப் படவேண்டியவை யென்றும், எம்பெருமான் ஆராதனைக்கு மிக எளியன் என்றும் ப்ரஸித்தம். ஆழ்வார்கள் அவனுடைய பெருமையைப் பேசுமிடத்து * தொழுது மாமலர் நீர்சுடர் தூபங்கொண்டு எழுதுமென்னுமிது மிகையாதலின் * என்றும், * தொழக்கருதுவதே துணிவது சூதே * என்றும் இப்புடைகளிலே அருளிச்செய்கிறார்கள். *பூயிஷ்டாம் தே நமஉக்திம் விதேம* என்கிற உபநிஷத் வாக்யத்திற்கு "தே பூயிஷ்டாம் நம உக்திம் விதேம" என்று அந்வயம் காட்டி 'நமஃ என்று வாயினாற் சொல்லுவதும்

தே பூயிஷ்டாம்—உன்கருத்தாலே மிகக் கனத்ததாகும்' என்று நம் பூருவர்கள் † அர்த்தம் செய்தருளுகிறார்கள். பட்டர் * அஞ்ஜலி பரம் வஹதே * என்கிறார். நாம் ஒரு அஞ்ஜலி செய்துவிட்டாலும் அது அத்தலைக்குப் பெரிய சுமையாகத் தோன்று மென்பதை நன்கு காட்டுகின்றார். ஆகவே, ஸ்வாராதனன எம்பெருமான் முன்னிலையில் நாம் பலகால் விழுந்தெழுந்தால் அவன் திருவுள்ளம் என்னாகுமோ? 'நம்மையும் தேவதாந்தரங்களைப்போலே நினைத்துவிட்டார்கள் போலும்' என்று அவன் திருவுள்ளம் புண்படலாகுமோ என்னவோவென்று அஞ்சி, "ஆராதனைக் கெளியன்" என்கிற அவனுடைய பெருமைக்குக் குறைவு வாராதபடி நடந்துகொள்வோமென்றே தென்னாசாரியர்களால் நமஸ்காரத்தில் ஆவ்ருத்தி ஸஹிக்கப்படவில்லை.

3. இந்த ஸக்ருத் ப்ரணாம விஷயத்தில் சாஸ்த்ர ஸரணியில் தெரிவிக்க வேண்டிய விஷயங்கள் பலவுண்டு. அவை மேலே அந்த ப்ரகரணத்தில் தெரிவிக்கப் பெறும். தென்னாசார்ய ஸம்பிரதாயம் முக்கியமாக எந்த அடிப்படையின்மீது நிற்கிற தென்பதை மூதலிக்கவே இவ்விஷயம் இங்கு எடுத்துக் காட்டப்படுகிறது. நாம் சேதனராகப் பிறந்திருக்கிற வாசிக்கு ஏதோ சைதந்ய கார்யமாக ஸ்வல்பம் செய்யக் கடமைப்பட்டிருக்கிறோம்; இது கார்யகரமேயன்று, அவன் திருவுள்ளத்திலிரக்கமே கார்யகரம்; அது நம்முடைய ஆகிஞ்சந்யமும் அநந்யகதித்வமுமடியாக விளையக் கூடியது; ஆகிஞ்சந்யத்துக்கு எதிராக அதிக ப்ரவ்ருத்திகளைக் காட்டினோமாகில் நாம் ஏதோ உபாயாநுஷ்டாநம் செய்கிறோமாகத் திருவுள்ளம்பற்றி எம்பெருமான் கை வாங்கி நிற்க நேரும்; அப்படி அவன் உதாஸீநனைகைக்கு நாம் அவகாசம் கொடுக்கலாகாது. ஆனால் உபாயாநுஷ்டானங்கள் செய்யும்படி அவனே சாஸ்த்ரங்களில் விதித்திருக்கும்போது அவற்றை யதேஷ்டமாக நாம் செய்தாலென்ன? செய்ய வேண்டியதுதானே என்று பிறர் நினைக்கலாம். தென்னாசார்யர்கள் அங்ஙனம் நினைப்பவர்களல்லர். * நெறிகாட்டி நீக்குதியோ? * என்று நம்மாழ்வார் அருளிச்செய்தபடி, தன்னைவிட்டு நீக்குவதற்காக [நம்மை நன்கு சோதிப்பதற்காக] அவன் காட்டின வழிகளிலே நாம் கிடந்து துவளலாகாது; * காம்பறத் தலைசிரைத்து உன் கடைத்தலை யிருந்து வாழுஞ் சோம்பரை யுகத்திபோலும் சூழ்புனலரங்கத்தானே * என்று தொண்டரடிப்பொடி யாழ்வாரருளிச் செய்தபடி திண்ணிதான அத்யவஸாயங் கொண்டிருப்பதே உற்றது என்கிற உறுதி தென்னாசார்யர்களின் கருவிலேயே ஊறிக்கிடப்பதாகும். ஆகவேதான் இவர்கள் ஸக்ருந் நமஸ்காரத்தையுங் கூட ஊற்றமின்றிக்கே செய்துபோருவது.

4. நம்பிள்ளையினுடைய திவ்ய ஸூக்திகளிலே இரண்டொன்றை இங்கெடுத்துக்காட்டி இவ்விஷயத்தை நெஞ்சில் பதியவைக்கின்றேன். திருவாய்மொழியில் * பத்துடையடியவர்க் கெளியவன் பிறர்களுக்கு அரிய வித்தகன் * என்ற விடத்து

† இவ்வர்த்தம் திருவாய்மொழியில் (3-3-6) * அது சுமந்தார்கட்கே* என்ற விடத்து ஈட்டிலும், ஆசார்ய ஹ்ருதயத்தில் "அகில பரத்தையும் ஸமர்ப்பிக்க அது சுமந்து" (3.53) என்ற விடத்து வியாக்கியானத்திலும் காணத்தக்கது; ஸாக்ஷாத்ஸ்வாமி யென்கிற இதரஸம்பிரதாய ஆசார்யரும் இவ்வர்த்தத்தையே ஆதரித்துள்ளார்.

"நம்முடையவர்கள் எம்பெருமானையே உபாயமாகப் பற்றுநிற்க, அல்லாதார் அசேதந க்ரியாகலாபங்களைப் பற்றுகிருப்போலேயிறே துர்யோதனன்நிலை" என்றுள்ளது.

இதனால் நம்முடையவர்கள்படியும் அல்லாதார்படியும் காட்டிற்றாயிற்று. மேலே அந்தப் பதிகத்திற்கு அடுத்த பதிகத்திலே (1-4-7) * என் பிழைத்தாள் திருவடியின் தகவினுக்கு * என்ற விடத்து ஈட்டில்—"தேவரீர்க்ருபைக்குத் தண்ணீர்த் துரும்பாக ஏதேனும் ப்ரதக்ஷிண நமஸ்காராதிகள் பண்ணிற்றுண்டோவென்று நம்பிள்ளை யருளிச்செய்யும் படி" என்றுள்ளது. இந்த ஸ்ரீஸூக்தியை நன்கு விமர்சிக்கவேணும். எம்பெருமானிடத்தில் தூதுவிடுகிற ப்ரகரணம் இது. என்ன தப்பு செய்துவிட்டதாக உபேக்ஷித்திருக்கிறீரென்று கேளுங்கோளென்று இங்கே மூலமுள்ளது. "நாங்கள் ஏதேனும் ப்ரதக்ஷிண நமஸ்காராதிகள் செய்துவிட்டதாக எண்ணி உபேக்ஷித்திருக்கிறீரோவென்று கேளுங்கோள்" என்பதாக நம்பிள்ளை விவரணம் செய்தருளுகிறார். இதனால் ப்ரதக்ஷிண நமஸ்காராதிகள் செய்வது எம்பெருமானுடைய க்ருபைக்கு ப்ரதிபந்தகம் என்று ஸ்பஷ்டமாக விளங்குகின்றது. இப்படி யருளிச் செய்திருக்கிற நம்பிள்ளை பகவத் ஸந்நிதியில் ப்ரதக்ஷிண நமஸ்காராதிகள் செய்திருக்கமாட்டாரா? செய்திலர் என்றால் இதை யாரேனும் நம்பமுடியுமா? அது சாஸ்த்ரார்த்தந்தானாகுமா? எதற்காக இங்ஙனே நம்பிள்ளை யருளிச்செய்தார்? என்று விவேகிகள் விமர்சிக்க வேண்டுமன்றோ? அன்றியும், சிறிய திருமடலில் "செங்குறிஞ்சித் தாரார் நறுமாலைச் சாத்தற்குத் தான் பின்னும் நேராதனவொன்று நேர்ந்தாள்" என்றுள்ளது. இங்கு மூலத்தின் மேல் அர்த்தமென்னவென்றால், செங்குறிஞ்சி மாலையை யணிகின்ற 'சாஸ்தா' என்கிற தேவதாந்தரத்தை நோக்கி ஓர் அஞ்ஜலியும் பண்ணிவிட்டாள் என்பதாம். 'ஒன்று நேர்ந்தாள்' என்ற மூலத்திற்கு ஓர் அஞ்ஜலி செய்தாளென்று அர்த்தம். இங்கே "தான் பின்னும் நேராதனவொன்று நேர்ந்தாள்" என்ற சொற்சுவையை நோக்கிப் பெரியவாச்சான் பிள்ளை என்ன வியாக்கியானம் செய்தருளியிருக்கிறாரென்றால்;

"(தான்) வகுத்த விஷயத்திலே ஓர் அஞ்ஜலி பண்ணினால் அது ஸாதனத்தில் அந்வயிக்கில் செய்வதென்? என்றிருக்கக் கடவ தான்" என்று

அருளிச் செய்துள்ளார். இதனோடுஞ் சேர்த்து முன்னே காட்டிய நம்பிள்ளை ஸ்ரீஸூக்திக்குஅர்த்தம்செய்யுமளவில் தென்னாசார்யர்களின் திருவுள்ளவுண்மை புலப்படும். உபாயகோடியில் எள்ளளவும் அந்வயியாமல் ஸ்வரூபத்தளவிலே நிற்கும்படி சில செய்வதே உற்றது; எதையேனும் அதிகப்படியாகச் செய்தால் அது உபாய கோடியிலே அந்வயித்து ஆகிஞ்சந்யத்தைக் குலைத்து எம்பெருமானுடைய திருவருளுக்கு இடையூறாக நிற்குங்கொல்! என்கிற அதிசங்கை இவர்களுக்குள்ளதென்னுமிடம் விளங்காநின்றது. இதன் மேல் பிறர் பலவகையான ஆக்ஷேபங்களைக் கொண்டு புகுத்தக் கூடும். அவற்றுக்கு ஸமாதானங்களும் பலவுள. ஆனால் அந்த ப்ரபஞ்சனங்களுக்கு இடமளிக்கும் ஸந்தர்ப்பம் இதுவன்று. ஆழ்வார்களின் ஸ்ரீஸூக்திகளுக்குக் காப்பாக ஆளவந்தார் உடையவர் ஆழ்வான் பட்டர் முதலானோர் ஒருமிடறாக அருளிச் செய்து போந்த அர்த்த விசேஷம் அறிவிக்கின்ற தத்துவத்தைத் தெரிவித்தோமித்தனை. எந்த விஷயத்திலும் சாஸ்த்ரங்கள் ஒரு வழியையே காட்டமாட்டா; பலவழிகளையும் காட்டி நிற்கும். ஒவ்வொரு அதிகாரிகள் ஒவ்வொரு வழியைப் பற்றி நிற்பது ஸஹஜம்.

இனித் தென்னாசார்ய ஸித்தாந்தப்பொருள்கள் பலவற்றையும் விளக்குகின்றேன்.

# 1. பகவத்க்ருபையின் நிர்ஹேதுகத்வநிரூபணம்

5. பகவத்க்ருபை நிர்ஹேதுகமா, ஸஹேதுகமா! என்பது ஒரு விசாரம். ஸஹேதுகம் என்பர் ஒரு சாரார். நிர்ஹேதுகம் என்பர் தென்னாசார்யர். நம்முடைய நற்குண நற்செய்கைகள் காரணமாக எம்பெருமானுடைய திருவருள் தோன்றுகின்றதென்று ஒப்புக்கொண்டால் ஸஹேதுகம் என்றதாகும். அப்படியல்லாமல் அது தானே தோன்றுகின்றதென்று ஒப்புக்கொண்டால் நிர்ஹேதுகம் என்றதாகும். பகவத்க்ருபை, தானே தோன்றுகின்றதென்று எப்படி ஒப்புக்கொள்ள முடியும்? அப்படி தோன்றுவதானால் என்றைக்கும் எல்லார் விஷயத்திலும் தோன்றலாமே. அருளுக்கு இலக்காகாதார் ஒருநாளும் ஒருவரும் இல்லாதபடியன்றோ இருக்கவேண்டும். அப்படி காணாமையாலும், சில கால விசேஷங்களில் சில அதிகாரிகள் மீதுமட்டும் அவனருள் தோன்றக் காண்கையாலும் அப்போது ஒரு ஹேதுவை முன்னிட்டுத் தோன்றினதாகவே கொள்ளவேணும். ஆகவே அருள் ஸஹேதுகமே யல்லது நிர்ஹேதுக மென்கைக்கு ஔசித்யமில்லையேயென்று சங்கிக்கக் கூடும்.

6. இங்கு உண்மை யென்னவென்றால்:—அவனது மிகக் கனத்த அருளுக்கு ஹேதுவாக நம்மிடத்தில் என்ன சரக்கு உள்ளதென்று ஆராய்ந்து பார்த்தால் ஒரு அணுமாத்திரம் கிடைக்கக் கூடும். விஷயப்ரவணரான நாம் வேசிகளைப் பின் தொடர்ந்து அடிக்கடி கோவில்களிலே நுழைந்து புறப்பட நேரும். நம் வயலில் பட்டி மேய்ந்த பசுவை அடிப்பதாகத் துரத்திக்கொண்டு போம்போது அது ஒரு கோவிலை ப்ரதக்ஷிணஞ் செய்துகொண்டு ஓடுகிறவளவிலே அதை விடமாட்டாத ஆக்ரஹத்தாலே நாமும் அக் கோவிலை வலஞ்செய்து போகக்கூடும். சிசுபாலாதிகளைப் போலே நிந்தை செய்வதற்காக அடிக்கடி பகவானுடைய நாமங்களைச் சொல்லக்கூடும். இவ்விதமாகச் சில ஸுக்ருத விசேஷங்கள் காரணமாக எம்பெருமானருள் நம் மீது தோன்றிற்றென்றால் இதைக்கொண்டு ஸஹேதுகமென்று சொல்லிவிடலாமோ? கொடிய தண்டனைக்குரிய பாவங்களை யன்றோ நாம் செய்திருப்பது. இதில் அதிஸ்வல்பஸுக்ருதம் கலந்திருப்பது கொண்டு எம்பெருமான் அருள் செய்தானென்றால் அநுக்ரஹோந்முகனை அவன் திருவுள்ளத்தால் ஸஹேதுகமானால் ஆகலாம். "எந்நன்றி செய்தேனா என்னெஞ்சில் திகழ்வதுவே" "என்னுணர்வினுள்ளே யிருத்தினேன் அதுவுமவனதின்னருளே" "வெறிதேயருள் செய்வர்" என்றிவை போலும் பாசுரங்களை யநுஸந்திக்கப் பிறந்த நம் நினைவால் நிர்ஹேதுகமேயாகக் கடவது.

7. நம்மிடத்தில் சில ஆத்ம குணங்கள் இருந்தாலுங்கூட அவற்றை அஸத்கல்பமாக நினைத்து 'அமர்யாத: க்ஷுத்ர: சலமதிரஸூயாப்ரஸவபூ: * ஈவிலாத தீவினைகளெத்தனை செய்தனன் கொல் * * பாவமே செய்து பாவியானேன் * என்று அநுஸந்திக்க வேண்டியதானாப் போலே பகவத்க்ருபைக்கு உறுப்பாக ஸ்வல்ப ஹேதுக்கள் இருந்தாலுங்கூட அவற்றை நாம் அஸத்கல்பமாகவே நினைக்கவும் 'இவையும் இல்லாமலே அவன் அருள் செய்ய வல்லவன்' என்று அநுஸந்திக்கவும் ப்ராப்தமாகையாலே நிர்ஹேதுக மென்கிற ஸித்தாந்தமே நிலைநிற்கும். இதன் மேல் 'எம்பெருமானருளாகிற மிகச் சிறந்த பலனுக்கு இந்த ஹேதுக்கள் ஸத்ருச

மன்று' என்று சொல்லலாமே தவிர, நிர்ஹேதுக மென்றே சொல்லி விடலாகுமோ? என்று ஆக்ஷேபங்கள் விளைவதுண்டு. அறிவுடையார் அங்ஙனமேதான் சொல்லா நின்றார்கள். திருவாய்மொழியில் முதற்பத்தில் பத்தாம் திருவாய்மொழியில் எம்பெருமானுடைய நிர்ஹேதுக கருணையை ஆழ்வார் அநுபவித்து ஈடுபடுவதாக நன்கு விளங்குகின்றது. வேதாந்தவாரியரும் அவ்விடத்திற்கு * அவ்யாஜோதாரபாவாத் * என்று தான் ச்லோகமிட்டருளினர்.

8. ஸ்ரீவசநபூஷணம் நான்காவது ப்ரகரணம் ஆரம்பம்—"த்ரிபாத் விபூதியிலே பரிபூர்ணாநுபவம் நடவாநிற்க........... என் ஊரைச் சொன்னாய். என் பேரைச் சொன்னாய், என் அடியாரை நோக்கினாய், அவர்கள் விடாயைத் தீர்த்தாய், அவர்களுக்கொதுங்க நிழலைக் கொடுத்தாய் என்னுமாபோலே சிலவற்றை ஏறிட்டு மடிமாங்காயிட்டு ..........ஜந்ம பரம்பரைகள் தோறும் யாத்ருச்சிகம் ப்ராஸங்கிகம் ஆநுஷங்கிக மென்கிற ஸுக்ருத விசேஷங்களைக் கற்பித்துக்கொண்டு தானே அவற்றை ஒன்று பத்தாக்கி நடத்திக்கொண்டு போரும்" என்று ஆச்சரியமான சூர்ணிகை யொன்றில் எம்பெருமானுடைய விஷயீகாரத்தின் பரிசு பரமபோக்யமாக நிரூபிக்கப்பட்டுளது. இந்த ஸ்ரீஸூக்தியின் சுவடறிந்த வேதாந்தவாரியர் இப்பொருளை அப்படியே அமைய வைத்துப் பரமபத ஸோபாநத்தில் பணித்ததாவது,

> "அஜ்ஞாத யாத்ருச்சிக ஆநுஷங்கிக ப்ராஸங்கிக ஸாமாந்ய புத்தி மூல ஸுக்ருத விசேஷங்களை வ்யாஜமாகக் கொண்டு விசேஷ கடாக்ஷம் பண்ணி" என்று.

9. இவ்விஷயத்தில் ஸாரமாகச் சொல்லுவது கேண்மின். எம்பெருமானை வசீகரிப்பதற்கு உபாயமாக சாஸ்த்ரங்களில் கர்மஜ்ஞான பக்தி ப்ரபத்திகள் கூறப்பட்டுள்ளன வென்பது ப்ரஸித்தம். சேதநர்களை ரக்ஷித்தருள்வதில் இயற்கையாகவே ருசியுடையனான எம்பெருமான் * ஸம்ஸாரதந்த்ரவாஹித்வாத் ரக்ஷ்யாபேக்ஷாம் ப்ரதீக்ஷதே * என்கிறபடியே இத்தலையில் சிறிது எதிர்பார்க்கிறானென்று சொல்லி வைத்தது. மற்றொரு பக்கத்தில் எம்பெருமானுடைய திருவாக்கைப் பார்த்தாலோ * நாஹம் புருஷகாரேண நசாப்யந்யேந ஹேதுநா, கேவலம் ஸ்வேச்சயைவாஹம் ப்ரேக்ஷே கஞ்சித் கதாசந * என்று காண்கிறது. "நான் புருஷகாரத்தைக் கொண்டும் கடாக்ஷிப்பதில்லை, வேறு எந்த ஹேதுவையிட்டும் கடாக்ஷிப்பதில்லை; என்றைக்கோ வொருநாள் யாரோ வொரு அதிகாரியை என் இச்சையினாலேயே நான் கடாக்ஷிப்பேன்" என்பது மேலே காட்டின ச்லோகத்தின் பொருள். இங்ஙனம் பேசுகின்ற எம்பெருமானது திருவருளை ஸஹேதுகமென்று நினைக்க நாமார்? நம்பக்கல் கைம்முதல் கொண்டே எம்பெருமான் நம்மைக் காத்தருள்கின்றானென்று கொள்வது ஹேயமாகும். * மருவித்தொழும் மனமே தந்தாய் * * என்னைத் தீமனங் கெடுத்தாய் * என்கிற அநுஸந்தானம் அக்ருத்ரிமமாகக்கடவது. .... *

பகவத் க்ருபா நிர்ஹேதுகத்வ நிரூபணம் முற்றிற்று.

## 2. ப்ரபத்தியின் அநுபாயத்வ விவரணம்

10. ப்ரபத்தி உபாயமாஅன்று என்பது ஒருவிசாரம். கீழே பகவத்க்ருபையின் நிர்ஹேதுகத்வ நிரூபணம் பண்ணினது கொண்டே ப்ரபத்தியின் அநுபாயத்வமும் நிஷ்கர்ஷிக்கப்பட்டதாகும். தனிப்படவும் நிரூபிக்கிறேன். 'கடையில் சென்று எண்ணெய் வாங்கிக்கொண்டுவா' என்று கட்டளையிடப்பெற்ற வொருவன் அது வாங்கக் கோணியையோ கூடையையோ எடுத்துக்கொண்டு புறப்பட்டானாகில் 'எண்ணெயின் ஸ்வரூபத்தையே இவன் தெரிந்து கொள்ளவில்லை போலும்' என்று நினைக்கத் தடையில்லையன்றோ. அதுபோல, ப்ரபத்தி உபாயமென்று சொல்லப்புகுமவர்கள் ப்ரபத்தியின் ஸ்வரூபத்தையே உள்ளபடி யறிந்திலர்போலும் என்றே நினைக்கவேண்டியதாகும். ப்ரபத்ியாவது என்ன? * த்வமேவோபாய பூதோ மே பவேதி ப்ரார்த்தநாமதி:, சரணாகதி:* என்று சாஸ்த்ரம் சொல்லுகிறது. எம்பெருமானையே உபாயமாக அத்யவஸிக்குமதுவே ப்ரபத்தியென்பது. இத்தகையதான ப்ரபத்தியானது தன்னிடத்தில் உபாயத்வத்தை எங்ஙனே ஸஹிக்கும்? ப்ரபத்தியென்கிற வஸ்து தேறும்போதே அதன் அநுபாயத்வமும் தேறியே தீரும் இதை வேதாந்த வாசிரியர் வெகு சதுரமாக நிரூபித்தருளுகிறார்; ந்யாய ஸித்தாஞ்ஜநத்தில் ஜீவபரிச்சேதத்தில்—

* இயம் கேவல லக்ஷ்மீசோபாயத்வ ப்ரத்யயாத்மிகா,
ஸ்வஹேதுத்வதியம் ருந்தே கிம்புநஸ் ஸஹகாரிணம். *

என்பது அவருடைய ஸ்ரீஸூக்திகளில் தலையானது. எம்பெருமானொருவனையே உபாயமாகக் கொள்வதாகிற இந்த ப்ரபத்தியானது தன்னிடத்தில் உபாயத்வ புத்தியைத் தடைசெய்கின்றது; ப்ரபத்திக்கே உபாயத்வ மில்லாதபோது அதன் ஸஹகாரிகளானவற்றுக்கு அது இல்லை யென்னுமிடம் தனிப்படச் சொல்ல வேணுமோ? என்பது இந்தச்லோகார்த்தம். இதில்*கேவலலக்ஷ்மீ சோபாயத்வப்ரத்யயாத்மிகா*என்கிற விசேஷணம் தர்மிக்ராஹகப்ரமாணரூபம். "லக்ஷ்மீததீசோபாயத்வப்ரத்யயாத்மிகா"என்னாமையாலேபிராட்டியின் உபாயத்வமும் இங்கேப்ரதிக்ஷிப்தம்.

11. சாஸ்த்ரங்களில் ஒன்று விதிக்கப்படுமானால் அது உபாயமாக [ஸாதனமாக] இருந்து தீரும் என்பது பொதுவான வொரு கொள்கை. உபாயமாக மாட்டாததை சாஸ்த்ரம் எதற்காக விதிக்கும்? எப்போது விதி ஏற்படுகிறதோ அப்போது விதிக்கப்படுகின்றவதின் உபாயத்வமும் கூடவே ஸித்திக்கு மாதலால் சரம ச்லோகத்தில் * மாம் ஏகம் சரணம் வ்ரஜ * என்று விதிக்கப்படுகிற ப்ரபத்திக்கு உபாயத்வம் அநிவார்யம் என்று சிலர் நினைக்கக் கூடியதுண்டு. இதனையும் ந்யாஸ திலகமென்கிற க்ரந்தத்தில் அவரே எடுத்துக் காட்டி ஸமாதானமும் வகுத்துள்ளார். *ஹேதுர் வைதே விமர்சே * என்கிற ச்லோகம் காண்க. இதன் கருத்தாவது—ப்ரபத்தியானது விதிக்கப்பட்டிருப்பதனால் உபாயமென்று சொல்லவேண்டியிருந்தாலும் இங்கு அப்படி கொள்ள வேண்டா; ஒவ்வொரு வித்யையிலும் எம்பெருமானுக்கு ஒவ்வொரு ரூபம் அறியக்கடவதா யிருக்கிற கணக்கிலே இந்த ப்ரபத்திவித்யையில் இதராநபேக்ஷ உபாயத்வம் [பிறிதொன்றை எதிர்பாராத உபாயத்வம்] அறியத்தக்க ரூபமாதலால்—என்று இந்த ச்லோகத்தில் நிரூபிக்கப்பட்டுளது. இது மிக வலிதான நிரூபணம்.

12. இங்கு மற்றொரு வாதம். ஸித்தோபாயமென்றும் ஸாத்யோபாயமென்றும் உபாயம் இருவகைப்படும். எம்பெருமான் ஸித்தோபாயமானாலும் ஸாத்யோபாயமாக ஒன்றை அங்கீகரித்தே யாகவேண்டுமென்பர் பிறர். இதற்கு அறிவிக்கவேண்டிய ஸமாதானமாவது—ஸாத்யோபாயமென்றால் "சேதநனுடைய முயற்சியால் ஸாத்ய மான உபாயம்" என்று தானே பொருளாகும். உண்மையில் இது சேதந க்ருதியாலே ஸாத்யமானதா? என்று ஆராய்ந்தால், மேலெழுந்தவாரியாக அப்படிச் சொல்லலா மாயினும் * இசைவித்தென்னை யுன்தாளிணைக் கீழிருத்து மம்மானே * என்பது போன்ற பல பாசுரங்களைக் கண்டால் இது நம்முடைய முயற்சியால் ஸாத்யமன்றிக்கே ஸர்வேச்வரனுடைய க்ருஷி பலமாகவே விளையுமதாக உண்மை தெரிவதால் ஸாத்யோ பாயமென்கிற வ்யபதேசமும் இதற்கு முக்கியமாகாது; கௌணமாமத்தனை. இவ் விஷயம் "ஸ்வீகாரந்தானும் அவனாலே வந்தது; ஸ்ருஷ்ட்யவதாராதி முகத்தாலே பண்ணின க்ருஷிபலம்" என்ற பிள்ளை லோகாசார்யருடைய ஸ்ரீ ஸூக்திக்குச் சார்பாக வேதாந்தவாரியர் பணித்த * நிதாநம் தத்ராபி ஸ்வயமகில நிர்மாண நிபுண:* இத்யாதி பரச்சத ஸ்ரீஸூக்திகளோடு ஸம்வாதியாகும். *வரத! தவ கலு ப்ரஸாதாத்ருதே சரணமிதி வசோபி மே நோதியாத் * என்று கூரத்தாழ்வான் ஸ்ரீஸூக்தியும் தெளிவு பெறுத்தும். "ஸ்வாமிந் ஸ்வசேஷம் ஸ்வவசம் ஸ்வபரத்வேந நிர்ப்பரம், ஸ்வதத்த ஸ்வதியா ஸ்வார்த்தம் ஸ்வஸ்மிந் ந்யஸ்யஸிமாம்ஸ்வயம்" என்பதும் ஸ்வாமியினுடைய ஸூக்தி. இதில் ஒன்பதின்கால் ஸ்வசப்த ப்ரயோகம் பண்ணியிருக்குமழகு காண்க. இதனால் சேதநனுடைய முயற்சிநாற்றம் வேரற அறுக்கப்படுகின்றமை யறிந்தால் உபாயமென்றும் ஸாத்யோபாயமென்றும் வாய்திறக்க வழியுண்டோ?

13. "பகவத்ப்ரவ்ருத்தி விரோதி ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தியே ப்ரபத்தி" என்பது நம் ஆசார்யர்களின் ஸூத்ரம். அசித்வ்யாவ்ருத்த வேஷமாகவும் ஸ்வரூபாதிரேகி யல்லாதபடியாகவும் உள்ளதற்கு மேலே மிகையான ப்ரவ்ருத்திகள் நேர்ந்தால் ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயமுள்ளதாக எம்பெருமான் திருவுள்ளம்பற்றி நம்மை ரக்ஷிப்பதில் தான் கைவாங்கி நிற்கநேரும். ஆகவே இங்ஙனம் பகவத் ப்ரவ்ருத்திக்கு விரோதியாகக்கூடிய ஸ்வப்ரவ்ருத்தியில் நின்றும் நிவ்ருத்தியடைவதே ப்ரபத்தியாம். இவ்வர்த்தத்தைக் கூரத்தாழ்வான் * க்ஷாம்யஸ்யஹோ ததபிஸந்தி விராமமாத்ராத் * என்கிற ஸ்ரீஸூக்தியால் காட்டியருளினர். * சசால சாபஞ் ச முமோச வீர:* என்கிற ஸ்ரீராமாயண ச்லோகத்தைக் கொண்டும் இதை ரஸமயமாக்கியருளிச் செய்வர்கள். "வனத்திடரை ஏரியாம் வண்ணமியற்று மிதுவல்லால் மாரியார் பெய்கிற்பார் மற்று" என்கிற பூதத்தாழ்வாருடைய பாசுரத்தில் சுவடறிந்தார்க்கு இன்னமும் விரிவு வேண்டுமோ? ஆனாலும் ஸ்ரீபாஷ்யகாரரின் சில ஸ்ரீஸூக்திகளையும் காட்டி மிக்க விளக்கம் தருகின்றேன்.

*உபபத்தேச் ச * (3-2-4. என்கிற ப்ரஹ்மஸூத்திரத்தின் ஸ்ரீபாஷ்யத்திலே—

"ப்ராப்யஸ்ய பரமபுருஷஸ்ய ஸ்வப்ராப்தௌ ஸ்வஸ்யைவ உபாயத்வோபபத்தே:. * நாயமாத்மா ப்ரவசநேந லப்ய:..........தநூம் ஸ்வாம் * இதி அநந்யோபாயத்வ ச்ரவணாத்" என்றும், " * அம்ருதஸ்ய ஏஷ ஸேது: * இதி அம்ருதஸ்ய ஸ்வஸ்ய ஸ்வயமேவ ப்ராபக இதி ஸேதுத்வ வ்யபதேசோபபத்தேச்ச " என்றும் ;

* பலமத உபபத்தே: * (3-2-37.) என்கிற ஸூத்திரத்தின் பாஷ்யத்திலே—

"ஸ ஏவ ஹி ஸர்வஜ்ஞஸ் ஸர்வசக்தி: மஹோதாரோ யாகதாநஹோமாதிபி: உபாஸநேந ச ஆராதித: ஐஹிகாமுஷ்மிக போகஜாதம் ஸ்வஸ்வரூபாவாப்திரூப மபவர்க்கஞ்ச தாதுமீஷ்டே; ந ஹி அசேதநம் கர்ம க்ஷணத்வம்ஸி காலாந்தரபாவிபலஸாதநம் பவிதுமர்ஹதி" என்றும் அருளிச் செய்துள்ளார் பகவத் பாஷ்யகாரர்.

14. இந்த ஸ்ரீஸூக்திகளை யநுஸரித்தே நிகமாந்த குருவரும் கீதார்த்த ஸங்கிரஹ ரக்ஷையிலே * நிஜகர்மாதி பக்த்யந்தம் குர்யாத் ப்ரீத்யைவ காரித:, உபாயதாம் பரித்யஜ்ய ந்யஸ்யேத் தேவே து தாம் அபி:* என்கிற ச்லோக வியாக்கியானத்தில்—

"ஸ்வயம் ஸ்வாதுத்வாத் க்ஷணிகஸ்ய காலாந்தரபாவிபலஸாதநத்வ அநுபபத்தி தர்சநாச்ச நாஸ்ய ஸ்வவ்யாபாரே மோக்ஷோபாயதாபுத்திரபி ஸ்யாத் இதி பாவ: அந்தத: தைஸ் தை ராராதிதோ பகவாநேவஹி ஸர்வத்ரோபாய:" என்று பணித்தார். இது கீழே முன்னுரையில் விவரிக்கப்பட்டுள்ளது.

15. 'ப்ரபத்தி உபாயம்' என்று வாய்திறக்கவே கூடாதென்று ஒரு ஆசிரியர்க்கும் திருவுள்ளமில்லை. திருக்கச்சிநம்பிகள் மூலமாகப் பேரருளாளன் எம்பெருமானார்க்குப் பணித்த ஆறு வார்த்தைகளில் "மோக்ஷோபாயம் ப்ரபத்தி" என்றுள்ளது. எம்பெருமானாரும் ஸ்ரீ வைகுண்டகத்யத்தில் "தத்ப்ராப்தயே ச தத்பாதாம்புஜத்வய ப்ரபத்தேரந்யத் ந மே கல்பகோடி ஸஹஸ்ரேணபி ஸாதந மஸ்தீதி மந்வாந:" என்றருளிச் செய்தார். அந்தகத்யத்திலேயே "அம்ருத ஸாகராந்தர் நிமக்ந ஸர்வாவயவஸ் ஸுகமாஸீத" என்ற விடத்திற்கு வியாக்கியான மருளிச் செய்யாநின்ற பெரியவாச்சான் பிள்ளை "ப்ரபத்தியையே உபாயமாகக் கொண்டு ப்ராக்ருத மண்டலத்தை விட்டு" என்றருளிச் செய்தார். பிள்ளை லோகாசார்யரும் ஸ்ரீவசநபூஷணத்தில் "ப்ரபத்த்யுபாயத்துக்கு இக்குற்றங்களொன்று மில்லை" என்றருளிச் செய்தார். அவ்விடத்திற்கு வியாக்கியான மருளிச் செய்யா நின்ற மணவாள மாமுனிகள்—"இக்குற்றங்களொன்றுமில்லை யென்கையாலே மற்றொரு குற்றமுண்டென்னுமிடம் தோற்றுகிறது; அதாவது ஆபாத ப்ரதீதியிலே உபாயத்வப்ரதிபத்திக்கு அர்ஹமாம்படியிருக்கை" என்றருளிச் செய்தார். ஆராயுமிடத்து வாணிஜ்யாதிகளுக்கு த்ரவ்யார்ஜந ஸாதநத்வவ்யபதேசம் போலே ப்ரபத்திக்கும் மோக்ஷோபாயத்வவ்யபதேசம் கூடுமென்றும், உட்புகுந்து ஆராய்ந்து பார்த்தால் "*உன் மனத்தா லென்னினைந் திருந்தாயென்கிறபடியே ப்ராப்திக்கு உபாயம் அவன்னினைவு" என்று கொள்வதே பொருந்துமென்றும் ஸகலாசார்யஸித்தாந்தமாகத் தேறுகின்றது. "எம்பெருமானே! எம்பக்கலில் ஏதேனும் ஒரு உபாயத்தைக் கொண்டே எம்மைக் கைக்கொள்ளவேணுமென்று உனக்கு நிர்ப்பந்தமுண்டாகில், செயல் மாண்டு நிற்கையாகிற சரணாகதி தவிர வேறொன்றும் எம்பக்கல் இல்லாமையாலே இதனையே தான் நீ உபாயமாகக் கொள்ளவேணும்" என்று நம் ஆசாரியர்கள் ஸ்தோத்ரங்களிலே அருளிச் செய்வதுண்டு. இந்த அபிப்ராயங்கொண்டே ப்ரபத்த்யுபாயம் ப்ரபத்த்யுபாயம் என்கிறது.

16. வேதாந்தவாசிரியருடைய ஸூக்திகளில் "குணக்ஷதலிபிக்ரமாத் உபநிபாதிந: பாதி ந:" என்பது ஒரு அற்புதமான ஸ்ரீஸூக்தி. "புழுகுறித்ததெழுத்தாமாப்போலே"

என்ற பெரியவாச்சான் பிள்ளையின் ஸ்ரீஸூக்தியை ஸ்வாமி இங்ஙனே ச்லோக மாக்கி யருளினர். புழுவானது நிலத்தில் செல்லும்போது ஒரு எழுத்து எழுத வேணுமென்கிற எண்ணம் அதற்கு இல்லை; ஆனாலும், அதன் செல்லுகையை நாம் உற்று நோக்கினால் ஏதேனும் ஒரு எழுத்து தேறினதாக ஆகக்கூடும். இதற்கு குணாக்ஷர ந்யாயமென்று பெயர். இந்த ந்யாயத்தாலே யாத்ருச்சிகமாக நல்லதாய் முடிகின்ற நமது செயலை உபாயமென்று ஸாதிக்க நினைப்பது ஸமஞ்ஜஸமன்று. 'ப்ரபத்தி உபாயம்' என்று சொன்னாலும் "ந்யாஸ இதி ப்ரஹ்ம. ந்யாஸ இத்யாஹுர் மநீஷிணோ ப்ரஹ்மாணம்" என்கிற உபநிஷத்தின்படி ப்ரபத்தவ்யனை பரம புருஷனுக்கும் ப்ரபத்தியென்று வ்யபதேச முண்டாதலால் அவனையே உபாயமாகச் சொன்னதாய் முடிந்து நிற்குமத்தனை. .... .... .... .... *

## 3. சேதநலாபம் ஈச்வரனுக்கே பேறு என்கிற தத்துவம்

17. தென்னாசார்ய ஸம்பிரதாயத்தில் சேதநலாபம் ஈச்வரனுக்குப்பேறு? ஈச்வரலாபம் சேதநனுக்குப்பேறு? என்னும் விசாரமே தலைமை பெற்றிருக்கும். இந்த விசாரத்தின் முடிவை உள்ளபடியுணர்ந்தால் பல விவாதங்கள் தீரும். சாஸ்த்ரங்களை மேலெழப் பார்க்கும்போது 'ஈச்வரனை அடைவது சேதநனுக்குப் பேறு' என்பதாகவே தோற்றி நிற்கும். ["ப்ரஹ்மவித் ஆப்நோதி பரம்" இத்யாதி.] ஈச்வரனை ப்ராப்யனென்றும் சேதநனை ப்ராப்தாவென்றும் ஸ்பஷ்டமாகப் பல விடங்களிலும் சொல்லி யிருக்கையாலே 'ஈச்வர லாபம் சேதநனுக்குப் புருஷார்த்தம்' என்றே க்ரஹிக்க நேரும். பிறர் இப்படியே மதமாகக் கொண்டிருக்கிறார்கள். 'ஈச்வரனுக்கு சேதநலாபம் புருஷார்த்தம்" என்பது ஸகல தென்னாசார்ய ஸித்தாந்த ஸாரம். வேதாந்த குரு ஸூக்திகளை நன்கு ஆராய்ந்தால்அவருடைய திருவுள்ளமும் சேதந லாபம் ஈச்வரனுக்குப் பேறு என்றேதேறும். இதனை அவர் கீதாதாத்பர்ய சந்த்ரிகையில் வெகு சதுரமாகக் காட்டியுள்ளார். கீதையில் ஒன்பதாமத்யாயத்தின் முடிவிலுள்ள * மந்மநா பவ * என்கிற ச்லோகத்தின் பாஷ்யத்திற்கு விவரணமெழுதுகையில்—" ஆச்ரித ஸம்ரக்ஷணம் ஸ்வலாபம் மத்வா ப்ரவர்த்ததே" என்றருளி யிருப்பது காண்க. இதைப் பற்றின விவரணத்தை க்ரமேண காண்மின்.

18. "ப்ராப்தாவும் ப்ராபகனும் ப்ராப்திக்கு உகப்பானும் அவனே" என்பது ஸ்ரீவசன பூஷண ஸ்ரீஸூக்தி. சேதநனைப்பெறுவது ஈச்வரனுக்குப்பேறு என்றால் இவ்வர்த்தம் ஹ்ருதயத்தில் அவகாஹிப்பது சிரமமேயாகும். ஆனாலும் எளிதாக வுணர்த்துகிறேன். சேதநன் முக்தனாகிப் பரம பதத்தில் சென்றபின் அங்கு என்ன கோஷிக்கிறானென்பதை நம் உபநிஷத்து தெளிவிக்கின்றது. [அஹமந்ந மஹமந்ந மஹமந்நம்] என்பது முக்தனுடைய முதல் வார்த்தை. 'பகவானுக்கு நான் அன்ன மாகிறேன்' என்று ஒரு தடவைக்கு மூன்று தடவையாக இதில் சொல்லுகிறது. இதனால், ஈச்வரனானவன் சேதனனைப்பெற்று அநுபவிக்க வேணுமென்று பெரும் பசி கொண்டிருந்தானென்றும், அப்பசி முக்தாத்மாவால் தீருகிறதென்றும் ஸ்பஷ்டமாகிறது. இல்லையாகில் அஹமந்நம் என்று ஓதவேண்டியதில்லையன்றோ. அவ்விடத்திலேயே அடுத்தபடியாக [அஹம் அந்நாத: அஹம் அந்நாத: அஹம் அந்நாத:]

என்றும் ஓதுகிறது. எம்பெருமானுக்கு இவன் அன்னமாகி அவன் பசியைத் தீர்த்த பிறகு இவனும் தன்பசி தீருவதாக ஓதிற்று. "அஹமந்நம் அந்நமதந்தமத்மி" என்கிற மேல் வாக்கியத்தினாலும் இது விவரிக்கப்படுகிறது. இதன் தாற்பரியமென்னவென்றால், முக்தனாகிய தன்னை யநுபவித்து எம்பெருமான் விடாய்தீர்ந்து மகிழ்ந்து நிற்கையில் அந்த மகிழ்ச்சியைக் கண்டு தான் மகிழ்கிறான். இவன் அசேதநனல்லாமல் சேதநனாய் ஞானானந்தங்களை வடிவாக வுடையனா யிருக்கையாலே தன்னுடைய ஆனந்தமும் பயன் பெற்றதாகவேணுமே. அசித்திற் காட்டில் ஒரு வாசி ஏற்படவேணுமே. தன்னைப்பெற்று எம்பெருமான் ஆனந்திப்பதைக் கண்டு 'நம்மால் எம்பெருமானுக்கு இப்படியொரு ஆனந்த முண்டாயிற்றே!' என்று அநுஸந்தித்து அதனால் தான் ஆநந்திக்கையே ப்ராப்தம். 'அஹமந்நாத:' 'அஹமந்நமந்நமதந்த மத்மி' என்ற உபநிஷத்தின் கருத்து இதுவேயாம்.

19. இப்பரமார்த்தத்தை ஆழ்வார் திருவாய்மொழியில் பலவிடங்களிலும் வெளியிட்டருளுகிறார். * வாரிக்கொண்டு உன்னை விழுங்குவன் காணிலென்று, ஆர்வுற்ற என்னை யொழிய என்னின் முன்னம் பாரித்துத், தானென்னை முற்றப்பருகினான்.* (9-6-10) என்கிற பாசுரம் அவற்றுள் சிகரமானது. ஆசார்ய ஹ்ருதயத்தில் (2-18) * பெரும்பாழில் க்ஷேத்ரஜ்ஞன் பெருஞ் செய் * இத்யாதியான பெரிய சூர்ணையில் இவ்வர்த்தம் அற்புதமாக நிரூபிக்கப்படுகின்றமைகாண்க.

20. ஸ்ரீராமாயணத்தில் "அபிஷிச்ய ச லங்காயாம் ராக்ஷஸேந்த்ரம் விபீஷணம், க்ருத க்ருத்யஸ் ததா ராமோ விஜ்வரஃ ப்ரமுமோதஹ" என்கிற ச்லோக ரத்நத்தாலே வான்மீகி முனிவரும் வெளியிட்ட பரமார்த்தமிது. மகுடாபிஷேகம் பெற்ற விபீஷணாழ்வான் மகிழ்ந்தானென்று சொல்லவேண்டியிருக்க அங்ஙனம் சொல்லாமல் ச்லோகமமைத்திருக்கிற அழகை நோக்கவேணும். க்ருத க்ருத்யத்வமும் விஜ்வரத்வமும் ப்ரமோதசாலித்வமும் ஸ்வாமியான பெருமாளுக்கே யல்லது ஸ்வம்மான விபீஷணனுக்கில்லை யென்று விளங்கவைத்தார் வான்மீகி முனிவர்.

21. ஆத்மாவுக்கு சைதந்யாதீநமான போக்த்ருத்வ மிருந்தாலும், பாரதந்த்ரியத்தையும் போக்யதையையும் ஸ்வரூபவுண்மையாகத் திருமந்திரத்தினால் கண்டறிந்தவனுடைய போக்த்ருத்வமாகில் அது தன்னுடைய ரஸத்துக்கு உடலன்றிக்கே சேஷியினுடைய ரஸத்துக்கே உடலாயிருக்கும். * படியாய்க்கிடந்து உன்பவளவாய் காண்பேனே * என்கிற பெருமாள் திருமொழிப் பாசுரத்தில் "படியாய்க் கிடந்து" என்பதனால் அசேதந வ்ருத்தியும், "உன் பவளவாய் காண்பேனே" என்பதனால் சேதநவ்ருத்தியும் பிரார்த்திக்கப்பட்டன. இத்தலையை விநியோகங்கொண்ட எம்பெருமானுக்கு விளையும் உகப்பைக்கண்டு உகப்பதுதவிர வேறுபயனில்லை சேதநனுடைய ஆநந்தித்வத்திற்கு என்பதே ஸாரமானபொருள்.

22. இதனை ஆளவந்தார் "கதாஹமைகாந்திக நித்ய கிங்கரஃ ப்ரஹர்ஷயிஷ்யாமி" என்கிறஸ்தோத்ரரத்நஸ்ரீஸூக்தியால் ஸ்பஷ்டமாகக் காட்டியருளினார். இதில் 'ப்ரஹர்ஷயிஷ்யாமி' என்கிற க்ரியாபதம் ஆச்சரியமாக அமைந்தது. நான் எப்போது ஆனந்திக்கப் போகிறேன் என்னாமல் நான் எப்பொழுது எம்பெருமானை ஆனந்திப்

பிக்கப்போகிறேனென்று பேசியுள்ளார். ணிஜந்தப்ரயோகம் நோக்குக. இங்கு வியாக்கியானத்தில்—“தன்னுடைய அநுவ்ருத்தியால் ஈச்வரனுக்குப் பிறக்கும் ஹர்ஷமேயிறே சேதநனுக்கு ப்ராப்யம்” என்று பெரியவாச்சான் பிள்ளை அருளிச் செய்ததை வேதாந்தவாசிரியர் தமது ஸ்தோத்ர பாஷ்யத்தில் நன்கு விசதீகரித்திருப் பதைக் காணவேணும். *க்ருதார்த்தோ ஹம் பவிஷ்யாமி* *என்றும் மகிழ்வேனே* என வருமிடங்களில் இந்த நிர்ணயத்திற்கு அநுகுணமாகவே ஆசாரியர்கள் அர்த்த நிர்வாஹம்செய்து போருவர்களாதலால் அவற்றைக்கண்டு மருளவேண்டா.

23. எம்பெருமானர்ஸ்ரீபாஷ்யத்தின் முடிவில் * அநாவ்ருத்திஸூத்ரபாஷ்யத் தில் “ந ச பரமபுருஷ: ஸத்யஸங்கல்ப:” இத்யாதி ஸூக்தியினால் ‘சேதநலாபமே ஈச் வரனுக்குப்பேறு’ என்கிற ஸத்ஸம்ப்ரதாய ரஸ்ய ரஹஸ்யப்பொருளை ஸ்தாபித்தருளி னர். அங்கே விஷயம் என்னவென்றால், மோக்ஷத்திற்குச் சென்ற சேதநன் திரும்பி வருதல் உண்டா இல்லையா? என்று விசாரம் வந்தது. ஈச்வரன் கேட்பாரற்ற ஸ்வதந்திர னுதலால் அந்த ஸ்வாதந்திரியத்தினால் முக்தாத்மாவைத் திருப்பி யனுப்பி விடக் கூடுமன்றோ? என்கிற சங்கையுண்டாக, ஸூத்ரகாரர் * அநாவ்ருத்திச் சப்தாத் * என்று ஸூத்ரமியற்றினர். முக்தாத்மா ஒரு நாளும் திரும்பி வருவதில்லை யென்று சாஸ்த்ரம் முறை யிட்டிருக்கையாலே புநராவ்ருத்தி கிடையாதென்று ஸூத்ரகாரர் சொல்லிவிட்டார். பாஷ்யகாரரும் இவ்வர்த்தத்தை வியாக்கியானித் தார். ஆனல், தோன்றின சங்கைக்கு த்ருப்திகரமான ஸமாதானம் வந்ததாகவில்லை. “யதி பரமபுருஷாயத்தம் முக்தைச்வர்யம், தர்ஹி தஸ்ய ஸ்வதந்த்ரத்வேந தத்ஸங் கல்பாத் முக்தஸ்ய புநராவ்ருத்திஸம்பவாசங்கா—இத்யத்ராஹ” என்பது ஸூத்ர பாஷ்யாவதாரிகை. ஈச்வரன் ஸ்வதந்திர னுகையாலே கேட்பாரற்று முக்தாத்மாவை மீண்டும் கீழே தள்ளிவிட நினைத்தால் என் செய்வது? என்பது சங்காசரீரம். ‘தள்ள மாட்டானென்று சாஸ்த்ரம் சொல்லியிருக்கையாலே’ என்று விடை கூறினதால் என்ன ஸமாதானம் வந்ததாகும். சாஸ்த்ரத்தையும் மீறிச் செய்வதன்றோ ஸ்வதந்த்ர க்ருத்யம். அப்படிப்பட்ட ஸ்வாதந்திரியத்தாலே ஈச்வரன் ஒன்று செய்யப் புகுந்தால் சாஸ்த்ரம் குறுக்கே நிற்குமோ? என்றன்றோ இங்குப்பூர்வபக்ஷம் உபக்ஷிப்தமா யிற்று. அதற்குத் தினவடங்கச் சொல்லவேண்டிய ஸமாதானத்தை ஸூத்ரகாரரும் இதர பாஷ்யகாரரும் சொல்லாத குறைதீர நம் பாஷ்யகாரர் வெகு ஸமஞ்ஜஸமாக அருளிச் செய்கிறார். இது ஸமான்யமான விஷயமன்று; ஜீவநாடியான விஷயம்.

24. ஈச்வரன் ஸ்வதந்திரனே யானாலும் உன்மத்தனல்லன், மூர்க்கனல்லன், அரஸிகனல்லன். ஸத்ய ஸங்கல்பனென்று பேர்பெற்றவன். தன்னுடைய மநோ ரதத்திற்கு மாறுபாடாக நடந்துகொள்பவனல்லன். ஒரு சேதநனைப் பெறுவதற்கு அவன் என்னபாடு படுகிறான் தெரியுமோ? அவன் ஸ்ருஷ்டி பண்ணுவதும் அவ தாரங்கள் பண்ணுவதும் சேதநரை லபிக்கைக்காகவன்றோ? எவ்வளவோ தவப் பயனாக ஒரு சேதநனை லபித்தபின்பும் ரஸிகனான அப்பரமபுருஷன் அவனை இழப் பனே?—என்று இவ்வளவுமெழுதி நம் பாஷ்யகாரர் சங்காபரிஹாரத்தைத் தலைக் கட்டி யுள்ளார். இதில் “பரம புருஷ: ஜ்ஞாநிநம் லப்த்வா” என்கிற ஸ்ரீஸூக்தி விந்யாஸமானது எம்பெருமானர் திருவுள்ளத்தில் திருவாய்மொழி யமுதக்கடல்

அலையெறிகிறபடியை நன்கு காட்டுகிறது. கீதையில் * ஸ மஹாத்மா ஸுதுர்லப:* என்று எம்பெருமான் தானே சோதி வாய் திறந்து பணித்ததையும் உடனே உதாஹரிக்கிறார். * எல்லாம் கண்ணனென்றிருக்கிற மஹாத்மா மிகவும் துர்லபன் என்று பகவான் தன் திருவாக்காலே சொன்னால், அப்படிப்பட்டவொரு மா ஞானியை லபிக்கைக்கு அவன் எவ்வளவோ பாடுபடுகிறவன் என்பது விளங்கவில்லையா? ஆகவே சேதந லாபமே ஈச்வரனுக்குப்பேறு என்கிற ஸித்தாந்தம் நன்கு பொலிந்ததாயிற்று.

25. ஆகில், யத்கிஞ்சித்ஸுக்ருதகரணம், பேற்றுக்கு த்வரிக்கைஇவையெல்லாம் நம் பக்கலில் அடியோடு வேண்டாவோ என்று பிறர் க்ஷேபிக்க வருவர்கள். சைதந்ய கார்யமாக விளையுமவை நம்மால் தவிர்க்கவொண்ணாதவை. அவையுங்கூட நம்மால் விளைவனவல்ல. * அதுவுமவனதின்னருளே * என்றாராழ்வார். "நிதாநம் தத்ராபி ஸ்வயமகிலநிர்மாணநிபுண:" என்கிற நிகமாந்தார்ய ஸூக்தியால் இவ்வுண்மையும் திண்மைபெறும். இந்த ஸூக்தி பல குசோத்யங்களை அடியறுப்பதன்றோ.

26. சொத்தைப் பெற்று அநுபவித்து ஆநந்திக்க வேணுமென்கிற ஆவல் ஸ்வாமிக்கே உரியதாகவும் உள்ளதாகவும் உலகிற் காண்கிறோமாதலால் இந்த நியாயமேயாகும் இங்கும். ஆனால் ஜீவாத்மாவாகிற இந்த சொத்து சைதன்யமாகிற †கல்மஷத்தோடும் கூடியிருக்கையாலே சிறிது தலையாட்டவும் வாலாட்டவும் பெறுகிறது. தன்னை நன்றாக வுணரும்போது தலைமடிந்து நிற்கிறது. ஆக சேதநலாபம் ஈச்வரனுக்கே பேறு என்கிற தத்துவம் நன்கு நிரூபிக்கப்பட்டதாயிற்று. .... *

## 4. பரகதஸ்வீகார ப்ராசஸ்த்ய நிரூபணம்

27. சேதநன் தான் எம்பெருமானைப் பற்றுவதானது ஸ்வகத ஸ்வீகாரமென்றும், எம்பெருமான் தானே சேதநனை வரிப்பதானது பரகத ஸ்வீகாரமென்றும் சொல்லப்படுகிறது. அடைவே மர்க்கடகிசோர ந்யாயமென்றும் மார்ஜார கிசோர நியாயமென்றும் வழங்குவர். பரகத ஸ்வீகாரமென்பதன் சுவையை அறியப்பெறாத பிறர் 'இது அஸங்கதமான பேச்சு' என்பர். அது கிடக்க. கீதாபாஷ்யத்தில் எம்பெருமானார் தெளிவித்தருளின மஹார்த்தம் இது. அதில் எட்டாவது அத்யாயத்தில் பதினான்காவது ச்லோகம் * அநந்யசேதாஸ் ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யச:, தஸ்யாஹம் ஸுலப: பார்த்த! நித்யயுக்தஸ்ய யோகிந:* என்பது. *ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம்* என்று பகவான் தான் தனக்கு உயிர்நிலையாகக் கொண்டாடும் ஞானியானவன் தன்னை உபாஸிக்க வேண்டியபடியையும் பேறு பெறும் பரிசையும் இனி யருளிச்செய்கிறான் கண்ணபிரான் என்று அவதாரிகையிட்டு சுலோகத்தை வியாக்கியானித் தருளியுள்ளார் ஸ்ரீபாஷ்யகாரர்.

† நிலாத் தென்றல் சந்தனம் புஷ்பம் முதலியன போலே ஸர்வாத்மநா பரதந்திரமாயிருக்கவேண்டிய ஜீவாத்மாவுக்கு சைதந்யமே இடையூறாக நிற்றலால் இதைக் கல்மஷமென்கிறது.

28. * அநந்யசேதாஸ் ஸததமித்யாதி சுலோகத்தின் கருத்தாவது, எவன் இடைவிடாமல் எப்போதும் வேறொன்றிலும் நெஞ்சைச் செலுத்தாதவனாய் என்னையே ஸ்மரிக்கிறானோ, என்னோடு நித்யஸம்ச்லேஷத்தை விரும்பியிருக்கின்ற அந்த பக்தனுக்கு நான் ஸுலபன்—என்பதேயாம். இதில் [தஸ்யாஹம் ஸுலப:] அவனுக்கு நான் எளியன் என்கிற பகுதிக்கு பாஷ்யம் செய்தருளியிருக்கின்ற அழகை என் சொல்வோம்! பாஷ்யபங்க்திகள் வருமாறு:—

"தஸ்ய நித்யயுக்தஸ்ய—நித்யயோகம் காங்க்ஷமாணஸ்ய யோகிந: அஹம் ஸுலப:—அஹமேவ ப்ராப்ய:. ந மத்பாவ ஐச்வர்யாதிக:. ஸுப்ராபச் ச. தத்வியோகம் அஸஹமாந: அஹமேவ தம் வ்ருணே. மத்ப்ராப்த்யநுகுணஉபாஸநவிபாகம் தத்விரோதிநிரஸநம் அத்யர்த்த மத்ப்ரியத்வாதிகஞ் ச அஹமேவ ததாமீதி அர்த்த:; * யமேவைஷ வ்ருணுதே தேந லப்ய: ॥ இதி ஹி ச்ரூயதே. வக்ஷ்யதே ச* தேஷாம் ஸததயுக்தாநாம்....இதி."

29. இவ்வளவும் கீதாபாஷ்ய ஸூக்திகள். இவற்றின் பொருளாவது—என்னோடு எப்போதும் கூடியிருக்க வேணுமென்கிற விருப்பமுடையவனுக்கு அடையத்தகுந்தவன் நானேயாகிறேன் காண்; (அதாவது) அவனுடைய பிரிவைப் பொறுக்க மாட்டாதவனாய் [அவனைப் பிரிந்து தரித்திருக்க மாட்டாதவனாய்] நானே அவனை வரிக்கிறேன். என்னையடைவதற்கான உபாஸனத்தின் பரிபக்குவ நிலைமையையும் அதற்குற்ற இடையூறுகள் நீங்குதலையும் என்னிடத்தில் அதிகமான ப்ரீதி முதலியவைகளையும் நானே கொடுக்கிறேன். *நாயமாத்மா ச்ருதியில் இவ்வர்த்தம் ப்ரஸித்தமாயிருப்பதோடு இந்த கீதையிலேயே மேலே பத்தாவது அத்தியாயத்தில் 10, 11 ச்லோகங்களாலும் சொல்லப்படுகிறது — என்பதாம். மூலத்தில் இவ்வர்த்தமுள்ளதாவென்று பார்க்கவேணும்.

30. ஸத்ஸம்பிரதாயஸாரார்த்தம் இங்கே அவசாத் பொதிந்திருக்குமழகு காண்க. ஸ்ரீவசந பூஷணத்தில் 142 "இவன் அவனைப்பெற நினைக்கும்போது இந்த ப்ரபத்தியும் உபாயமன்று; 143. "அவன் இவனைப்பெற நினைக்கும்போது பாதகமும் விலக்கன்று" என்று அருளிச் செய்தவிடத்தில் வியாக்கியானத்தில் மணவாளமாமுனிகள் "உடைமையை உடையவன் சென்று கைக்கொள்ளுமாபோலே ஸ்வாமியான அவன் தானேவந்து அங்கீகரிக்கக் கண்டிருக்கக்கடவ பரதந்த்ரனான இச்சேதநனானவன் தான் ப்ரவியாய் தன்ஸ்வீகாரத்தாலே ஸ்வதந்த்ரனான அவனைப் பெற நினைக்குமளவில் அவன் நினைவுகூடாதாகில் இப்படி விலக்ஷணையாயிருக்கிற ப்ரபத்தியும் தல்லாபத்திற்கு ஸாதநமாகாதென்றபடி ..........ஸ்வாமியாய் ஸ்வதந்த்ரனான அவன் ஸ்வம்மாய் பரதந்த்ரனாயிருக்கிற இவனை ஸ்வேச்சையாலே பெறநினைக்குமளவில் பாதகமும் பிரதிபந்தகமாகமாட்டாதென்கை. இவையிரண்டாலும் ஸ்வகதஸ்வீகாரத்தின் அநுபாயத்வமும் பரகதஸ்வீகாரத்தின் உபாயத்வமும் காட்டப்பட்டதாயிற்று" என்றருளிச்செய்திருக்கும்ஸ்ரீஸூக்திகள் மேலே காட்டியகீதாபாஷ்ய ஸ்ரீஸூக்திகளையே அடியாகக்கொண்டவையென்று நன்கு புலப்படுகின்றது. மணவாளமாமுனிகள் தாம் முன்பு ஒரு வேஷத்தாலே கீதாபாஷ்யத்தில் வடமொழியாலே அருளிச் செய்ததைப் பின்பு மற்றொரு வேஷத்தாலே ஸ்ரீ வசநபூஷண வியாக்கியானத்தில் தென்மொழியாலே அருளிச்செய்தாரென்று அறுதியிடத்தட்டில்லை.

31. மேலே உதாஹரித்த கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்தியில் ஒவ்வொரு வாக்கியமும் ஸாரமானது. [* தத்வியோகம் அஸஹமாந: அஹமேவ தம் வ்ருணே *] ஞானியான சேதநனைப்பிரிந்திருப்பதை எம்பெருமான் தான் பொறுத்திருக்கமாட்டாதவனாய்த் தானே அந்த சேதநனை வரிப்பதாகக்கூறுகின்றவிதுதான் பரகதஸ்வீகாரமென்பது.

32. [*மத்ப்ராப்த்யநுகுணோபாஸக விபாகம் அஹமேவ ததாமீத்யர்த்த:] இந்த வாக்கியமானது ஸ்வகதஸ்வீகாரப் பற்றுசை நன்றாகக் கழிக்கிறது. இத்தலையில் விளைவதெல்லாம் எம்பெருமானுடைய க்ருஷிபலமாக விளைகின்றதேயன்றி இவன்தலையாலே விளைவித்துக்கொள்ளுமது ஒன்றுமில்லை யென்கிற தென்னுசார்ய ஸம்ப்ரதாய ஸாரார்த்தம் தெளிவிக்கப்பட்டது. இந்த இடத்தில் *நாயமாத்மாச்ருதியையும் எடுத்துக் காட்டியருளின பாஷ்காரர் பரகதஸ்வீகாரத்திற்கு அதுவே பிரமாணமென்று நிரூபிக்கிறமுகத்தாலே பிறருடைய குத்ஸிதவாதங்களையெல்லாம் அகற்றினாராயிற்று.

33. இவ்விடத்தில் தாத்பர்ய சந்த்ரிகையில் ஸ்வாமி அருளிச்செய்துள்ள திவ்ய ஸூக்திகளும் தெள்ளியவே. "உக்தஸ்ய அதிவாதமாத்ரத்வசங்காவ்யுதாஸாய ச்ருதிமூலதாம் ஆஹ—*யமேவேதி." என்றருளிச் செய்திருப்பது ஆழ்ந்து நோக்கத்தக்கது. 'இதெல்லாம் சாஸ்த்ரங்களுக்குச் சேராத அதிவாதமான அர்த்தங்கள்' என்று இக்காலத்திற்போல அக்காலத்திலும் சிலரோ பலரோ சொல்லிக் கொண்டிருந்தார்களென்பது இதனால் நன்கு விளங்குகின்றதன்றோ.

34. இவ்விஷயத்தில் ஸாரமாகத் தெரிந்துகொள்ள வேண்டியது இவ்வளவே. *த்வத்பாதமூலம் சரணம் ப்ரபத்யே* என்றும் *புகலொன்றில்லாவடியேன் உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேனே* என்றும் சொல்லிக்கொண்டு [அதாவது நாம் பற்றுகிறோமாகக் காட்டிக்கொண்டு] திருவடிகளிலே விழுந்தாலும், 'இது நாம் பற்றின பற்றன்று; எம்பெருமான் தானே பற்றுவித்தானத்தனை; அவனுடைய க்ருஷி பலித்ததத்தனை" என்று உள்ளுற அநுஸந்திக்க ப்ராப்தம். இதையிட்டே பரகத ஸ்வீகாரமென்கிறது. இவ்வர்த்தம் வேதபுருஷாபிமதமுமானது;

"ப்ரஜாபதிம் த்வோவேத ப்ரஜாபதிஸ் த்வம்வேத, யம் ப்ரஜாபதிர் வேத ஸ புண்யோ பவதி"

என்று நம்வேதத்தில் முதல்காண்டம் ஆறும்ப்ரச்நத்தில் ஓதப்படுகிறது. இதுவும் பரகதஸ்வீகாரத்தின் பெருமையையே காட்டுகின்றதென்று *நீவேதயதமாம் க்ஷிப்ரம்* என்றவிடத்து வியாக்கியானத்திலே நிரூபித்தருளுகிறார். இந்த ச்ருதியில் ப்ரஜாபதியென்றது அவனுக்கு அந்தர்யாமியான பகவானைச் சொன்னபடி. (த்வோ வேத) ஒருவன் வரிக்கிறான்; த்வ என்பது ஒரு ஸர்வநாம சப்தம்; அந்ய: என்று அர்த்தம். எம்பெருமானை ஒருவன் வரிக்கிறான்; எம்பெருமான் ஒருவனை வரிக்கிறான்; இவ்விருவருள் எம்பெருமானால் வரிக்கப்படுமவனே புண்ணியன் என்பதாக இந்த ச்ருதியில் அநாயாஸமாகக் கிடைக்கும் பொருள். .... .... .... ... *

* பரகதஸ்வீகாரப்ராசஸ்த்ய நிரூபணம் முற்றிற்று *

## 5. ப்ரபத்தியின் அபாரதகோடிப்ரவேச நிரூபணம்

35. பகவத் ப்ரவ்ருத்தி விரோதி ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தியே ப்ரபத்தியென்று கீழே நிரூபித்ததானது ஸித்தாந்தத்தினுள்ளும் பரமஸித்தாந்தமான தொரு ஸூக்ஷ்மார்த்த விசேஷம். இது ஒரு புறமிருக்க, "ஆத்ம ஸமர்ப்பணம் ப்ரபத்தி" என்பது மொன்றுண்டு. "எனதாவி தந்தொழிந்தேன்" "தோள்களையாரத் தழுவி யென்னுயிரை அறவிலை செய்தனன்" என்று ஆழ்வாரும் * அஹம் அத்யைவ மயா ஸமர்ப்பித:* என்று ஆளவந்தாரும் அருளிச்செய்த கணக்கிலே ஆத்ம ஸமர்ப்பணத்தையும் ப்ரபத்தியாகக் கொள்ளக் கடவதாகையாலே இதுதன்னை நிரூபித்துப் பார்த்தால் இதை அபராத கோடியிலே எண்ணவேண்டு மென்பர் நம் ஆசிரியர்கள்; அப்படிச் சொல்வது அபசாரமென்பர் பிறர்.

36. உண்மையில் இது அபராத கோடியிலேயே சொருகி நிற்கும். * எனதாவி தந்தொழிந்தேன் * என்றவுடனே அதற்கு அநுதபித்து "எனதாவியார் யானார் தந்த நீ கொண்டாக்கினையே" என்று ஆழ்வார் அருளிச் செய்திருக்கையாலும், ஆளவந்தாரும் "அஹமத்யைவ மயா ஸமர்ப்பித:" என்றபின் "மம நாத யதஸ்தி யோஸ்ம்யஹம் ஸகலம் தத்தி தவைவ மாதவ! நியதஸ்வமிதி ப்ரபுத்ததீ: அதவா கிம்நு ஸமர்ப்பயாமி தே" என்று அநுதபித்து உண்மையை வெளியிட்டிருப்பதாலும்.

37. ஆளவந்தாருடைய திருவுள்ளத்தை நன்கு விவரிக்கிறோம் காண்மின்; 'மயா அஹம் ஸமர்ப்பித:' என்று மூந்துற ஆத்மஸமர்ப்பணம் பண்ணினதாக அருளிச் செய்தார். உடனே, 'இப்படிச் சொல்வதற்கு எனக்கு என்ன அதிகாரமுள்ளது? நான் என்கிற ஒரு வஸ்துவும், என்னுடையது என்கிற ஒரு வஸ்துவும் ஸ்வதந்த்ரமாக வுண்டோ? * யானே நீ என்னுடைமையும் நீயே * என்றபடி எல்லாம் ஏற்கெனவே உன்னுடையதாகவே யிருக்கும்போது, இந்த ஆத்ம வஸ்து உனக்கு இல்லாதது போலவும் இப்போதுதான் என்னால் புதிதாக ஸமர்ப்பிக்கப்படுவது போலவும் பேசி விட்டேனே பாவியேன்; ஸமர்ப்பிப்பதற்கு நானார்? ஸமர்ப்பிக்க என்னிடம் என்ன இருக்கிறது? அதிலும் உனக்கு நான் ஸமர்ப்பிக்க என்ன வுண்டு? இவ்விஷயங்களை ஆராயாமல்தானே அவிவேகியாய் 'அஹமத்யைவ மயா ஸமர்ப்பித:' என்று பிசகாகப் பேசி விட்டேனே! என்று அநுதாபம் காட்டி * மம நாத யதஸ்தீத்யாதியான அடுத்த ச்லோகம் அருளிச் செய்தாராயிற்று. கீழ் ச்லோகத்தில் ஆத்ம ஸமர்ப்பணம் பண்ணினதாகவும் அதைப்பற்றி இந்த ச்லோகத்தில் அநுதபித்ததாகவும் முடிந்தது. ஆகவே ஆத்ம ஸமர்ப்பணம் அபராத ரூபமென்றதாகிறது. மேலே செல்லுவோம்.

38. ஸ்ரீவசநபூஷணத்தில் இரண்டு சூர்ணைகள் இங்கே அநுஸந்திக்கவுரியன:—

(146) "ஸர்வாபராதங்களுக்கும் ப்ராயச்சித்தமான ப்ரபத்திதானும் அபராத கோடியிலேயாய் க்ஷாமணம் பண்ண வேண்டும்படி நில்லா நின்றதிறே. (147) நெடுநாள் அந்யபரையாய்ப்போந்த பார்யை லஜ்ஜாபயங்கள் இன்றிக்கே பர்த்ரு ஸகாசத்திலே நின்று என்னையங்கீகரிக்க வேணுமென்று அபேக்ஷிக்குமா போலே யிருப்பதொன்றிறே இவன் பண்ணும் ப்ரபத்தி" என்பன அவை.

இங்கு மணவாளமா முனிகளின் வியாக்கியானம் ஸேவித்துத் தெளிக.

39. நம்மாழ்வாரும் ஆளவந்தாரும் முன்னம் ஆத்ம ஸமர்ப்பணம் பண்ணிப் பின்னை அதற்காக அநுதபித்தார்களென்றும் ஆகவே ஆத்ம ஸமர்ப்பணம் அபராத ரூபமென்றும் சொல்லுகிற பக்ஷத்தில், அநுதாப யோக்யங்களான பாபங்களைப் போலே ஆத்ம ஸமர்ப்பணமும் ஒரு பாபமாகவன்றோ தேறுகிறது; அது செய்யக் கூடாத காரியம் என்று ஏற்பட்டுவிடாதா? இவ்விஷயம் ஆழ்வார்க்கும் ஆளவந்தார்க்கும் முன்னம் தெரியாமையில்லையே; தெரிந்து பாபத்தைப் பண்ணுவானேன்? பிறகு அநுதபிப்பானேன்? "ப்ரக்ஷாலநாத்தி பங்கஸ்ய தூராத் அஸ்பர்சநம் வரம்" (முன்னம் சேற்றில் காலை வைத்துப் பின்பு அதை அலம்புவதிற்காட்டிலும் சேற்றில் காலை வைக்காமலே யிருந்துவிடலாமே) என்கிறாப்போலே ஆத்ம ஸமர்ப்பண மென்கிற பேச்சையே ப்ரஸ்தாவியாம லிருந்துவிடலாமே என்கிற வாதங்கள் இங்கு விளையக் கூடியதுண்டு.

40. இதற்கு ஸமாதானமாகப் பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்வது பாரீர்:— "[தே சிம்நு ஸமர்ப்பயாமி] இத்தையுடைய உனக்கு எத்தை ஸமர்ப்பிப்பேன்? ஸமர்ப்பணீய மேது? ஸமர்ப்பகர் ஆர்? ஸமர்ப்பணீயமாகைக்கு ஸ்வாம்யமில்லை. ஸமர்ப்பிக்கைக்கு ஸ்வாதந்த்ர்யமில்லை. ஸம்ஸார பீதியால் ஸமர்ப்பிக்கையும் ஸ்வரூப யாதாத்ம்ய ஜ்ஞாநத்தால் அநுசயிக்கையுமாக இரண்டும் யாவந் மோக்ஷம் அநுவர்த்திக்கக் கடவது" என்று.

41. இதனால் தேறினது என்னவென்றால், ஆத்ம ஸமர்ப்பணம் பண்ணுகையும் அது பண்ணினதற்காகப் பிறகு அநுதாபம் காட்டுகையுமாகிற இரண்டும் சாஸ்த்ரார்த்தம் என்றதாகத் தேறிற்று.

42. இப்படி வியாக்கியானம் செய்யலாமோ? முந்துற ஆத்மஸமர்ப்பணம் பண்ண வேணும், பின்னை அநுதாபமும் படவேணும் என்றால் இது நன்றாக இல்லையே. தப்பான காரியத்திற்கன்றோ அநுதபிக்க வேண்டுவது—என்றே இன்னமும் பலருடைய நெஞ்சு தளும்பியே யிருக்கும். கேண்மின்; இந்த ஸ்தோத்ரரத்நத்திலேயே கீழே முப்பத்திரண்டாவது ச்லோகம் முதல் நாற்பத்தாறும் ச்லோகமளவும் பதினைந்கு ச்லோகங்களாலே எம்பெருமானுடைய நித்ய கைங்கரியத்தைப் பரம புருஷார்த்தமாகப் பிரார்த்தித்த ஆளவந்தார் தாமே அடுத்த (47) *திகசுசிமவிநீதம்* என்கிற ச்லோகத்தால் கீழே அப்படி பிரார்த்தித்ததற்கு மஹத்தான அநுதாபத்தை ஆவிஷ்கரித்திருக்கின்றாரென்பது அபரோக்ஷம். இங்கு ஆராயவேண்டுமே. கைங்கர்ய ப்ரார்த்தனை கூடுமா கூடாதா?* பவந்தமேவாநுசரந் நிரந்தரம்....கதாஹமைகாந்திக நித்யகிங்கர꞉ *நித்ய கிங்கரோ பவாநி* இத்யாதிகளை நோக்குமிடத்து கைங்கர்ய ப்ரார்த்தனை கூடுமென்று விளங்காநின்றது. *திகசுசி மவிநீதம் ...தவபரிஜநபாவம் காமயே காமவ்ருத்த꞉* என்றதனால் அந்த கைங்கர்ய ப்ரார்த்தனைக்காக ஆத்மகர்ஹை செய்துகொண்டதை நோக்குமிடத்து கைங்கர்ய ப்ரார்த்தனை கூடாதென்றே விளங்காநின்றது. வேதாந்தவாரியருங்கூட சரணாகதிதீபிகையில் "த்வத்கிங்கரத்வ விபவே ஸ்ப்ருஹயா அபராத்யந்"

என்று கைங்கர்ய ப்ரார்த்தனைக்குப் பூர்வபாவியான கைங்கர்யருசியையுங்கூட அபராத கோடியிலே வைத்துப் பேசியுள்ளார். அங்ஙனம் பேசினவர்தாமே கைங்கர்ய ப்ரார்த்தனையையும் பல பல ச்லோகங்களாலும் செய்யுள்களாலும் செய்தருளியிருக்கின்றார். இவை பரஸ்பர விருத்தங்களாகத் தோன்றவில்லையா? உண்மையில் இரண்டும் சாஸ்த்ரார்த்தமேயென்று நிஷ்கர்ஷித்தாலொழிய வழியில்லையன்றோ. கைங்கர்ய ப்ரார்த்தனையும் பண்ணவேணும்; 'ஸார்வபௌமனை நீசப்பெண் ஆசைப்படுமாபோலே ஐயோ என்ன ஆசைப்பட்டோம்! இது தகுமா?' என்று உடனே நெஞ்சாறல்படவும் வேணும் என்றே சாஸ்த்ரார்த்தம் சிக்ஷிதமாகிறது.

43. மற்றொன்றுங் காண்மின் :—*ஒட்டுரைத் திவ்வுலகுன்னைப் புகழ்வெல்லாம் பெரும்பாலும் பட்டுரையாய்ப் புற்கென்றே காட்டுமால் பரஞ்சோதீ* (திருவாய்மொழி 3-1-2) என்று, பரஞ்சோதியான எம்பெருமானுக்கு உலகத்திலுள்ள க்ஷணபங்குரமான தாமரை, மேகம், காயாம்பூ முதலானவற்றை ஒப்பாகச் சொல்லுதல் இழிவு என்கிறாராழ்வார். இஃது உண்மையா அன்று? உண்மையாகில் 'கொண்டல் வண்ணா! கடல் வண்ணா! காயா வண்ணா!' என்று பலகாலும் ஆழ்வார்கள் கதறுகின்றார்களே, இது என்ன? என்று ஆராயவேண்டாவோ? அன்றியும் பெரிய திருவந்தாதியில் *புகழ்வோம் பழிப்போம் புகழோம் பழியோம்* என்று எம்பெருமானை நாம் புகழ்வதானது பழிப்பதே யாகுமென்கிறார் நம்மாழ்வார். இப்படி சொல்லிக்கொண்டே மேன்மேலும் எம்பெருமானைப் புகழ்வதற்கே ஒருப்படுகின்றாரே, இது என்ன ? என்று இதையும் ஆராயவேண்டாவோ?

44. இன்னமும்; கூரத்தாழ்வான் அதிமாநுஷஸ்தவத்தில் "யா கம்ஸமுக்ய ந்ருப கீட நிபர்ஹணோத்தா ஸா நிர்ஜிதத்ரிஜகதஸ் தவ நைவ கீர்த்தி:" என்று, கம்ஸன் முதலிய அரசர்களாகிற புழுக்களை ஸர்வேச்வரன் தொலைத்தானென்று சொல்லி அவனையேத்துவதானது மூவுலகத்தையும் வென்றிருக்கிற அவனுக்குப் புகழ்ச்சியன்று, இகழ்ச்சியே என்று சொல்லிவைத்து அப்படிப்பட்ட கம்ஸவதம் முதலிய சரித்திரங்களையே மீண்டும் பேசிப் புகழ்கின்றாரே, இஃது என்ன? என்று இதையும் ஆராயவேண்டுமே. இங்ஙனே பல விஷயங்களுள்ளன. இவை ஒன்றுக்கொன்று அபவாதமாகுமோ? இவை யெல்லாம் பரஸ்பர விருத்தம்போல் தோன்றினாலும் உண்மையில் விருத்தமன்றே. இரண்டு படிகளும் சொல்லித் தீரவேண்டியவையத்தனையன்றோ.

45. இவைபோலவே முன்னம் ஆத்ம ஸமர்ப்பணம் பண்ணுகையும் பின்பு அதற்கு அநுதபிப்பதாகப்பேசுகையுமாகிற இரண்டும் சாஸ்த்ரார்த்த மென்று அறுதியிட்டபின் இதில் ப்ரத்யாக்க்யாந ப்ரஸக்தி யுண்டோ ?

46. முதலில் ஆத்ம ஸமர்ப்பணம் பண்ணிவிட்டுப் பிறகு அதற்கு அநுதாபம் காட்டுகிற ச்லோகத்தில் ஆளவந்தார் * இதி ப்ரபுத்ததீ: * என்கிறார். கீழ் ச்லோகம்

சொல்லும்போது [அதாவது ஆத்ம ஸமர்ப்பணம் பண்ணும்போது] தாம் அவிவேகியாயிருந்ததாகவும், உடனே விவேகம் பெற்று இந்த ச்லோகம் [அநுதாப ச்லோகம்] சொல்லுகிறதாகவும் இதனல் தெரிகிறது. ஏற்கெனவே மஹா விவேக நிதியாகப் புகழ்பெற்ற ஆளவந்தார் முன் ச்லோகம் ஸாதிக்கும்போது அவிவேகியாயிருந்தார், பின் ச்லோகம் ஸாதிக்கும்போது விவேகம் பெற்று விட்டார் என்கை ஏலாது. அப்படியிருக்க *ப்ரபுத்ததீ:* என்று ஸாதித்தது ஏன்? என்னில்: க்ரமேண சாஸ்த்ரார்த்தங்களை வெளியிட வேண்டுமிடத்து இங்ஙனே சொல்வது க்ரந்தசைலி.

47. இன்பமிகு மாறுயிரமருளிச் செய்த திருக்குருகைப்பிரான் பிள்ளானும் *எனதாவியுள்கலந்த வென்னும் பாசுர வியாக்கியானத்தில்—"இப்படி எம்பெருமானோடு கலந்த கலவியாலுள்ள நிரவதிக ப்ரீதியாலே அறிவழிந்து இவ்வாத்மா தம்முடைய தன்றென்று நிரூபிக்க மாட்டாராய் அவன் தம்மோடு கலந்த இப்பெரு நல்லுதவிக்குக் கைம்மாறாகத் தம்முடைய ஆத்மாவை அவனுக்கு மீளா வடிமையாகக் கொடுத்து, பின்னையும் தம்முடைய ஸ்வரூபத்தை உள்ளபடி விவேகித்து" என்றருளிச் செய்தார். அவ்விடத்திற்கும் இதுவே நிர்வாஹம்.

48. ஆகவே, முந்துற ஆத்ம ஸமர்ப்பணம் பண்ணுகையும் பின்னை அதற்காக அநுசய ப்ரகாசநம் பண்ணுகையுமாகிற விரண்டும் பரஸ்பராபவாதமல்லாத சாஸ்த்ரார்த்த மென்றதாயிற்று.

49. இதற்குமேல் ஒரு சிறிய கேள்வி தோன்றும்; ஆத்ம ஸமர்ப்பணம் பண்ண வேணுமென்பதும் சாஸ்த்ரார்த்தமாக ஆய்விட்டபடியாலே அந்த ஆத்ம ஸமர்ப்பணத்தை நாம் எப்போது செய்கிறோம் என்று. இதைப்பற்றி வேதாந்தவாரியரே ஸுவ்யக்தமாகத் தெரிவித்துள்ளார்.

50. ரஹஸ்யத்ரயஸாரத்தில் க்ருதக்ருத்யாதிகாரத்தில்—

"பகவத்க்ருபையடியாகவுண்டான ஸதாசார்ய கடாக்ஷ விஷயீகாரத்தாலே வந்த த்வயோச்சாரண அநூச்சாரணத்தாலே ப்ரபத்தியனுஷ்டானம் பிறந்த பின்பு சரண்ய ப்ரஸாதனங்களில் இதுக்குமேல் ஒன்றில்லாமையாலே"

இத்யாதி ஸ்ரீ ஸூக்திகளிருப்பது ப்ரஸித்தம். இந்த வாக்யத்தில் "த்வயோச்சாரண அநூச்சாரணத்தாலே ப்ரபத்த்யநுஷ்டானம் பிறந்த பின்பு" என்று ஸாதித்திருப்பதொன்றே தெளிவு பிறப்பிக்குமது. பஞ்ச ஸம்ஸ்கார காலத்தில் ஆசார்யன் த்வயத்தை உபதேசிக்குமளவில் அவர் உச்சரிக்க சிஷ்யன் அநூச்சாரணம் பண்ணுவதனல் ப்ரபத்தியநுஷ்டானம் பிறந்ததென்று தேறிற்று. த்வயத்தின் பொருள் நெஞ்சில் ஊறஊற, த்வயார்த்த ப்ரகாசகமான திருவாய்மொழிப் பாசுரங்கள் ஆசார்ய ஸ்ரீ ஸூக்திகள் இவற்றின் பொருள் நெஞ்சில் தேங்கத் தேங்க அதுவே ஆத்ம ஸமர்ப்பணமாகத் தலைக்கட்டும். இதைப்பற்றி மேலே தனிப்பட விரிவான நிரூபணம் வரும். ... .... .... .... .... *

## 6. உபாயாந்தரங்களின் ஸ்வரூபவிருத்தத்வ நிரூபணம்

51. ப்ரபத்தியொழிந்த மற்றை யுபாயங்கள் உபாயாந்தரங்களெனப்படும். உபாஸநம் முதலான அவற்றிலே, ப்ரபந்நர்களான நமக்கு ப்ராப்தியில்லையென்பது ஸர்வ ஸம்ப்ரதிபந்நம். சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டுள்ள அந்த உபாயாந்தரங்களை நாம் விடுகைக்கு ஹேது என்ன? என்கிற விசாரத்தில், அவற்றை [உபாயாந்தரங்களை] அறிகைக்கும் அநுஷ்டிக்கைக்கு மீடான ஜ்ஞாந சக்திகளில்லாமையே ஹேது என்பர் பிறர். அவையன்று ஹேது, பகவானுக்கு அத்யந்தம் பரதந்த்ரப்பட்டிருக்கையாகிற ஸ்வரூபத்துக்குச் சேராதென்னு மதுவே முக்ய ஹேதுவென்று நம்மவர்களின் ஸித்தாந்தம். அஜ்ஞானமும் அசக்தியுமடியாக விடுவதானால், ஜ்ஞான சக்திகளுண்டாகில் அவற்றைப் பரிக்ரஹிக்க வேண்டிவருமன்றோ; ஸ்வரூப விரோதமென்று விட்டாலன்றோ மறுவலிடாதொழிவது. ஆகவே ஸ்வரூப விருத்த மென்னு மதுவே ப்ரதாந ஹேதுவாகும்.

52. உபாயாந்தரங்களும் மோக்ஷோபாயமா யிருக்க அவற்றை இப்படி கழிக்கலாமோ? அவை யார்க்கு உபாயம்? என்னில், ஸ்வரக்ஷணத்தில் ஸ்வப்ரயத்ந நாற்றத்தையும் ஸஹியாத ஸ்வரூபத்தை உள்ளபடி யறிகைக்கீடான ஞானமில்லாதவர்களுக்கே அவை உபாயமாயிருக்கும். ஸ்வரூப யாதாத்மிய ஜ்ஞானமுடையவர்களுக்கு அபாயமாயே யிருக்கும். அத்யந்த பாரதந்த்ர்யமாகிற ஸ்வரூபத்துக்கு ஸ்வப்ரயத்ந ரூபமான அவை நாசகமாகுமன்றோ.

53. நம்மாழ்வார் பெரிய திருவந்தாதியில் (6) *நெறிகாட்டி நீக்குதியோ நின்பால்* என்றருளிச் செய்த பாசுரம் இதற்கு ப்ரமாணமாக அநுஸந்தேயம். இப்பாசுரத்தின் பொருளைக் கேளீர். நெறியென்றால் வழி; வழியாவது உபாயம். பகவத்கீதையில் சரம ச்லோகத்துக்குக் கீழே விரிவாகச் சொல்லப்பட்டுள்ள ஸாதநாந்தரங்களை இங்கு நெறி யென்கிறது. எம்பெருமான் யாரை அநுக்ரஹிக்கத் திருவுள்ளம் பற்றுகிறானோ அவர்களை நோக்கி 'நீங்கள் எவ்விதமான அலைச்சலும் படவேண்டா; என்னையே தஞ்சமாக உறுதிகொண்டு மார்விலே கைவைத்து உறங்குங்கள்' என்பன். எவர்களைக் கைவிட நினைக்கிறானோ அவர்களுக்கு அருந்தொழில்களை அளவில்லாதபடி விதித்து 'இவற்றைச் செவ்வனே செய்து பேறு பெறுங்கள்' என்பன். ஆகவே நெறி காட்டுகையென்பதும் நீக்குகை யென்பதும் பர்யாயம். நெறியைக் காட்டுகையாவது, 'இது கர்ம யோகம், இது பக்தியோகம்; இவற்றுள் எது உமக்கு ஸாத்யமோ அதனை அநுஷ்டிக்கக் கடவீர்' என்று சொல்லித் தான் உதாஸீநனுகை. [**நெறி காட்டி நின்பால் நீக்குதியோ**] உன்னை யொழிய வேறொருபாயத்தைக் காட்டி உன் பக்கலில் நின்றும் என்னை அகற்றப் பார்க்கிறாயோ வென்று ஆழ்வார் எம்பெருமானை நோக்கிக் கேட்கிறபடி. நள மஹாராஜன் தமயந்தியை உடுத்த புடவையிலே ஒரு தலைப்பை யறுத்து 'இது விதர்ப்ப தேசம் போகிற வழி, இது கோஸல தேசம் போகிற வழி, எந்த வழியில் வேணுமானாலும் போய்க்கொள்' என்று சொல்லிவிட்டு அகன்றாப்போலே அகலப் பார்க்கிறாயோ? என்று வினவுகிறபடி. ஆக இப்பாசுரத்தால், உபாயாந்தரங்களில் அந்வயிக்கை எம்பெருமான் பக்கலில் நின்றும்

அகல்வதற்குறுப்பு என்று தேறி நின்றது. *நெறி காட்டி நீக்குதியோ* என்ற விடத்தில் "நீக்குகையாவது பரதந்த்ரமான வஸ்துவை ஸ்வதந்த்ரக்ருத்யமான உபாயாநுஷ்டானத்திலே மூட்டித் தனக்கு அசலாக்குகை" யென்று மணவாளமாமுனிகளின் திருவாக்கு. முன்னோர் மொழிந்தமுறை தப்பாமல் கேட்டுரைத்த திருவாக்கு.

54. இவ்விஷயத்தில் திருக்குருகைப் பிரான் பிள்ளான் பணிப்பதொரு வார்த்தையுண்டு; அது ஸ்ரீவசநபூஷணத்திலே வ்யக்தம். "மதிராபிந்து மிச்ரமான சாதகும்பமய கும்பகத தீர்த்த ஸலிலம் போலே அஹங்காரமிச்ரமான உபாயாந்தரம்" என்று பிள்ளான் பணிப்பராம். பொற்குடத்திலிருக்கும் தீர்த்த ஜலமானது, பாத்ரசுத்தியுமுண்டாய் தானும் பரிசுத்தமாயிருக்க, மத்யபிந்துவின் கலப்பினாலே நிஷித்தமாகிறாப்போலே, ஸ்வதோ நிர்மலத்வாதிகளாலே பரிசுத்தமாயிருக்கின்ற ஆத்ம வஸ்துவிலுள்ளதாய், பகவானையே பற்றியதாதலால் பரிசுத்தமாயுமிருக்கின்ற உபாயாந்தரமானது ஸ்வயத்ந மூலமான அஹங்காரஸ்பர்சத்தாலே ஜ்ஞாநிகள் அங்கீகரியாதபடி நிஷித்தமாயிருக்கும் என்பது மேற்குறித்த பிள்ளான் திருவாக்கின் தாற்பரியம். "அஹங்கார மிச்ரமான உபாயாந்தரம்" என்ற இவ்வாக்கியத்தில் கூறும் அஹங்காரமாவது இன்னதென்று தெளியவேணும். தானே கர்த்தா வென்றும் தானே போக்தாவென்றும் அநுஸந்திப்பதுதான் இங்கு அஹங்காரமாவது. கீதையில் பதினெட்டாவது அத்யாயத்தில் (6, 9 ச்லோகங்களில்) "ஸங்கம் த்யக்த்வா" என்று உபாயந்தர நிஷ்டனுக்குச் சொன்ன அஹங்கார த்யாகமாவது–ஸ்வதந்த்ரனாக நான் கர்த்தா போக்தா என்கிற ஸ்தூலாஹங்கார த்யாகம். ஆயினும் அவனுக்கு ஸூக்ஷ்மாஹங்காரமொன்று அவர்ஜநீயமாயுண்டு. அது ஸ்வயத்ந ரூபதாநிபந்தநம். அதுவும் நிஷித்தமென்று பிள்ளானுடைய திருவுள்ளம். இது எங்ஙனே தெரிகின்றதென்னில், அவரது திருவாக்கில் "மதிராமிச்ரமான" என்னாதே "மதிரா பிந்து மிச்ரமான" என்று காண்கையாலே அந்த பிந்து பதத்தினால் இது தெரிகின்றது. கெடுப்பதற்கு அணுவளவும் போதுமாதலால், உபாயாந்தர ப்ரவ்ருத்தியில் ஸூக்ஷ்மாஹங்கார முண்டாகி அதுதான் அவர்ஜநீயமாயிருந்து அது அற்பமானாலும் ஸ்வரூப நாசகத்வத்தில் குறையற்றதென்று காட்டினபடி. "ஸ்வயத்ந நிவ்ருத்தி பாரதந்த்ர்ய பலம்" என்கிற ஸ்ரீ வசநபூஷண திவ்ய ஸூக்தியும் காண்க. *என்னான் செய்கேன்* என்கிற ஆழ்வார் பாசுரத்தை ஸ்ரீ வசநபூஷணத்தி லெடுத்தாண்டவிடத்து மணவாளமாமுனிகளின் வியாக்கியான ஸ்ரீ ஸூக்திகளில் வைசத்யமும் காணத்தக்கது. இது வடிக்கட்டின ஸம்ப்ரதாயர்த்தம்.

55. இப்படிப்பட்ட ஸத்ஸம்ப்ரதாயார்த்தத்தை ஸ்வாமி ந்யாஸதிலகத்தில் வெகு சதுரமாகக் காட்டியுள்ளார். எங்ஙனே யென்னில்; அதில்—

"ஆர்த்தேஷ்வாசுபலா ததந்யவிஷயேபி உச்சிந்நதேஹாந்தரா
வஹ்ந்யாதேரநபேக்ஷணாத் தநுப்ருதாம் ஸத்யாதிவத் வ்யாபிநீ.
ஸ்ரீரங்கேச்வர ! யாவதாத்மநியத த்வத்பாரதந்த்ர்யோசிதா
த்வய்யேவ த்வதுபாயதீः அபிஹிதஸ்வோபாயபாவா அஸ்து மே."

என்பது ஒரு ச்லோகரத்நம். இதில் ப்ரபத்திக்கு இட்டிருக்கிற விசேஷணங்களத்தனையும் பக்தி வ்யாவர்த்தகங்கள். விவரித்துக் காட்டுகிறேன் காண்மின்; [ஆர்த்தேஷு

ஆசுபலா] பக்தியானது விளம்பித்துப் பலனளிக்கும்; ப்ரபத்தி அங்ஙனன்றிக்கே விரைவில் பலனளிக்கும்—ஆர்த்தப்ரபந்நர்திறத்தில். [ததந்யவிஷயேபி உச்சிந்ந தேஹாந்தரா] பக்தியானது தேஹாந்தர ஸம்பந்தத்தையறுத்துத்தருவதில் நியதியுடையதன்று; ப்ரபத்தி நியமேந தேஹாந்தர ஸம்பந்தத்தை யறுத்துத் தரும். [வஹ்ந்யாதே: அநபேக்ஷணாத் தநுப்ருதாம் ஸத்யாதிவத் வ்யாபிநீ] பக்தியாகிற உபாயத்தின் அநுஷ்டானத்தில் அக்நிகார்யம் முதலியவை அபேக்ஷிதமாயிருக்கையாலே அது அதிக்ருதாதிகாரமா யிருக்கும்; ப்ரபத்தியில் அவ்வபேக்ஷை யில்லாமையாலே ஸத்யம் சொல்வதற்கு எப்படி ஸர்வரும் அதிகாரிகளோ' அப்படியே ப்ரபத்தியிலும் ஸர்வரும் அதிகாரிகள். இனி இதற்கு அடுத்த விசேஷணமே ப்ரக்ருத விஷயத்திற்கு உற்று நோக்கத்தகது. [யாவதாத்ம நியத த்வத் பாரதந்த்ர்யோசிதா] பக்தி ஸ்வரூப விருத்தம், ப்ரபத்தி ஸ்வரூபாநுரூபம் என்கிறது. யாவதாத்மநியதமான அத்யந்த பாரதந்த்ர்யத்துக்கு ப்ரபத்தி உசிதமாயிருக்குமென்றபோதே ப்ரபத்திப்ரதிகோடியான பக்தியானது அந்த பாரதந்த்ரியத்திற்கு விருத்தமாயிருக்குமென்னுமிடம் ஸ்பஷ்டமாகத் தெரிவிக்கப்பட்டதாயிற்றன்றோ. ஆகவே ஆசிரியர்திருவுள்ளமும் உபாயாந்தரம் ஸ்வரூப விருத்தமென்பதே யென்று தேறி நின்றது. இதனையே *பத்தி முதலாமவற்றில் பதியெனக்குக் கூடாமல்* என்ற அடைக்கலப்பத்துச் செய்யுளும் விளக்கமாகக் காட்டுகின்றது. இந்தச் செய்யுள்யார் இயற்றியதாயினும் பிறர்க்கு ப்ரமாணமேயன்றோ. ஸ்வாமி பணித்ததாகவன்றோ இவர்கள் கூறுவது.

56. உபாயந்தரங்களை ஸ்வரூப விருத்தமென்ன வொண்ணாது, இவை *அகிஞ்சநோ நந்யகதி:* என்றிருக்குமவர்க்கு ஸ்வாதிகாரவிருத்தங்களென்ன ப்ராப்தம்—என்றும் அவர் ரஹஸ்யத்தில் பேசியிருப்பதுண்டு. இதைப்பற்றின விசாரவிரிவு இங்கு விடுக்கப்பட்டது. ந்யாஸதிலகத்தி லருளிச்செய்தபடியே இவை அத்யந்தபாரதந்த்ர்ய ஸ்வரூபத்துக்குப் போராதென்கிற ஸத்ஸம்ப்ரதாய நிஷ்கர்ஷம் சாலவினிது.

★ உபாயாந்தரங்களின் ஸ்வரூப விருத்தத்வநிரூபணம் முற்றிற்று. ★

## 7. எம்பெருமானுடைய வ்யாப்தி தத்துவம்

57. உபநிஷத்தானது *அந்தர் பஹிச்ச தத் ஸர்வம் வ்யாப்ய* என்று ஸகலபதார்த்தங்களிலும் எம்பெருமான் உள்ளும் புறமும் வியாபித்திருப்பதாக ஓதி யிருக்கின்றது. அணுவான பதார்த்தங்களில் உள்ளீடாக வ்யாப்தி ஸம்பவிக்கமாட்டாதென்று ஒரு வாதம். அவயவியான பதார்த்தங்களுக்கே உள்-வெளி என்று சொல்லக்கூடுமாதலாலும் நிரவயவமான அணுபதார்த்தங்களுக்கு 'உள்ளே வெளியே' என்று சொல்வதற்கு ப்ரஸக்தி யில்லாமையாலும் அணுபதார்த்தங்களிலே எம்பெருமானுக்கு உள்ளுற வ்யாப்தி சொல்லவொண்ணாது என்கிறார்கள் பிறர்.

58. அன்றியும், ஒரு பொருளிலும் எம்பெருமானுக்குப் பரிஸமாப்யவர்த்தித்வம் [அதாவது - பரிபூர்ண வ்யாப்தி] கொள்ளவொண்ணாது, ஒரு பதார்த்தத்திலே அவனுக்குப் பரிபூர்ண வ்யாப்தியை அங்கீகரிக்குமளவில் [அதாவது பகவானுடைய ஸ்வரூபம் ஒன்றிலே பரிஸமாபித்து வர்த்திக்கிறதென்னில்] மற்றொரு பதார்த்தத்தில்

வியாபிக்க ப்ரஸக்தியில்லாமையாலே பரிஸமாப்ய வ்யாப்தியை அங்கீகரிக்கலாகா தென்றும் மற்றொரு வாதம் கூறுவர் பிறர்.

59. அணுபதார்த்தங்களிலும் அந்தர் வ்யாப்தி உண்டென்றும், ஒவ்வொரு பொருளிலும் பரிஸமாப்யவர்த்தித்வமும் பொருந்துமென்றும் பூர்வாசார்ய ஸித்தாந்தம். சாரீரக மீமாம்ஸையில் (ப்ரஹ்ம ஸூத்ரத்தில்) * க்ருத்ஸ்நப்ரஸக்திர் நிரவயவத்வசப்தகோபோ வா * என்கிற பூர்வபக்ஷ ஸூத்ரத்தின்மேல் "ச்ருதேஸ்து சப்தமூலத்வாத்" என்கிற ஸித்தாந்த ஸூத்ரம் அவதரித்துள்ளது. சாஸ்த்ரங்களினால் தேறுகின்ற விஷயங்களில் குதர்க்க மூலகமான குசோத்யங்களைச் செய்யாமல் சாஸ்த்ரம் சொன்ன கட்டளையிலே இசையவேண்டுமென்று இந்த ஸூத்ரம் சிக்ஷிக்கின்றது. * அந்தர் பஹிச்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயணஃ ஸ்திதஃ* என்று ச்ருதி ஸ்பஷ்டமாகச் சொல்லி வைத்தது. வேதஞ் சொன்னது ஒருபுற மிருக்கட்டும். வேதார்த்த நிர்ணயகர்களான மஹாசார்யர்கள் நிஸ்ஸந்தேஹமாக அருளிச் செய்திருப்பது என்ன? என்று பார்ப்போம்.

60. ஸ்ரீ பாஷ்யகாரருடைய ஸாக்ஷாத் திருவடியான திருக்குருகைப்பிரான் பிள்ளான் திருவாய்மொழியில் (1·1·10) * பரந்த தண் பரவையுள் நீர்தொறும் பரந்துளன் * என்கிற பாசுரத்தின் ஆறாயிரப்படியில் இங்ஙனே யருளிச் செய்கிறார் :— "அதி ஸூக்ஷ்மமாயிருந்த அசித் வஸ்துக்களிலும் வியாபித்து அவற்றினுள்ளே ப்ரகாசிக்கிற சித் வஸ்துக்களிலும் ஸ்தூலமான அண்டத்தில் வியாபித்தாற்போலே அநாயாஸத்தாலே அஸங்குசிதனாய்" என்று. தசோபநிஷத் பாஷ்யகாரரான ஸ்ரீரங்க ராமாநுஜ ஸ்வாமி திருவாய்மொழிக்கு ஒன்பதினாயிரப்படி யென்று ஸம்ஸ்க்ருத ப்ரதிபதார்த்தடீகை பணித்துள்ளார். [அச்சிட்டு மிருக்கிறது.] அதில் இப்பாசுரத்தின் வியாக்கியானத்தில் அவர் பணித்திருப்பதாவது "ஏகைகஸ்மிந் ஜலபரமாணௌ அதி விசாலப்ரஹ்மாண்ட இவ வ்யக்திஷு ஜாதிவத் பர்யாப்த வ்ருத்திஃ" என்று. இதன் பொருளாவது, வ்யக்திகளில் ஜாதியானது எப்படி பரிஸமாப்யவர்த்திக்கின்றதாக ஜாதிவாதிகளால் கொள்ளப்பட்டிருக்கின்றதோ அப்படி எம்பெருமான் ஒவ்வொரு ஜலபரமாணுவிலும் அதி விசாலமான ப்ரஹ்மாண்டத்தி லிருப்பதுபோல (நெருக்குண்ணுமல்) நிறைந்திருக்கின்றான் என்பதாம். இங்கு * பர்யாப்த வ்ருத்திஃ* என்று இம்மஹான் பணித்திருப்பது பூருவர்களின் ஸித்தாந்தத்தை நன்கு அடியொற்றியதாம். இவர் ப்ரமாதாக்களில் தலைவரன்றோ.

61. பகவானுடைய ஸ்வரூபம் ஓரிடத்தில் பரிஸமாப்ய வர்த்திக்குமானால் அது மற்றோரிடத்தில் இருக்க ப்ரஸக்தியில்லை. ஏனென்றால், ஒன்றில் பரிஸமாப்தமாய் விட்டதென்றால் அவ்வளவோடு முற்றிற்று என்றபடியாகையால் மற்றொன்றிலே யிருக்க அவகாசமேது? வஸ்துவே இல்லையன்றோ. பரிஸமாப்ய வர்த்தமாநத்வமென்பதை சாஸ்த்ரீய ஸரணியில் பேசுவதானால் "ததிதராவ்ருத்தித்வே ஸதி தத்வ்ருத்தித்வம்" என்று நிஷ்கர்ஷிக்க வேண்டியதாகும். ஆகவே ஸர்வவ்யாபகனாக ஓதப்படுகின்ற எம்பெருமானை ஒரு வஸ்துவிலும் பரிஸமாப்ய வர்த்தமாநனாகச் சொல்லமுடியாது என்று சோத்யம் ப்ராப்தமாகிறது. இப்படிப்பட்ட சோத்யம் இன்று நேற்றல்ல; ஆயிரக்கணக்கான ஆண்டுகட்கு முன்னமே தோன்றினதுண்டு.

* ஒன்றுந் தேவு ஈட்டு ப்ரவேசத்திலேயே இந்த சோத்யம் உபக்ஷேபிக்கப்பட்டிருப்பது காணலாம். அவ்விடத்து ஸ்ரீஸூக்திவருமாறு ;—"ஜாதி வ்யக்திதோறும் பரிஸமாப்ய வர்த்திக்குமென்றால் அசித்பதார்த்தத்துக்கு இது கூடுமென்றிருப்பர்கள் ; பரமசேதநனையிருப்பானொருவன் பரிஸமாப்யவர்த்திக்கு மென்றால் இதுகூடாதென்று ஸம்சயியாநிற்பர்கள்." என்று.

62. வேதாந்தவாரியரும் ந்யாயஸித்தாஞ்ஜந-ஈச்வரபரிச்சேதத்தில் இவ்வாக்ஷேபத்தை யெடுத்துக் காட்டிச்ருதேஸ் து சப்தமூலத்வாத் " என்கிற ப்ரஹ்மஸூத்ரத்தையே கொண்டு "யதாகமம் ஸர்வத்ர பூர்ண ஏவ பகவாந்" [சாஸ்த்ரம் சொன்னபடி பகவான் எங்கும் பூர்ணனே] என்று தலைக்கட்டியருளினார்.

63. ஸ்ரீபாஷ்யகாரர் அருளிச்செய்த வேதார்த்த ஸங்க்ரஹத்திற்கு ச்ருதப்ரகாசிகா பட்டர் அருளிச்செய்த தாத்பர்ய தீபிகையில். "நிரம்சே ப்ரதிபதார்த்தம் பூர்ணவர்த்திந்யபி ஸ்வரூபே அம்சசப்தவ்யவஹாரஃ ஏகஸ்மிந்நேவ வஸ்துநி ஸ்வரூபஸ்ய பூர்ணவர்த்திதயா அந்யத்ர வ்ருத்த்ய யோக்யத்வ சங்காவ்யுதாஸார்த்தஃ" என்கிற ஸ்ரீஸூக்திகள் உள்ளன; பரம புருஷன் ப்ரதிவஸ்து பூர்ணன் என்கிற விஷயத்தில் எவ்விதமான ஆக்ஷேபம் கீழே காட்டப்பட்டதோ அந்த ஆக்ஷேபந்தன்னையே ச்ருதப்ரகாசிகாசார்யர் உத்க்ஷேபித்து அதற்கு நிராஸம் வந்துவிட்டதாக அருளிச் செய்திருக்கிறாரென்பது இதில் ஸுஸ்பஷ்டம். இந்த ஸ்ரீஸூக்தி அமைந்திருக்கிற விதம் நன்கு ஆராயத்தக்கது. "அந்யத்ர வ்ருத்த்யயோக்யத்வசங்காவ்யுதாஸார்த்தஃ" என்று கண்ணாடிபோலுள்ளது. ஒரு வஸ்துவிலேயே ஸ்வரூபம் பரிஸமாப்தமாக இருந்துவிட்டால் அது மற்றொரு வஸ்துவில் இருக்கமுடியாதே யென்கிற சங்கை தள்ளுண்டதாக இந்த மஹாசார்யர் அருளிச் செய்திருக்கும்போது இன்னமும் அந்த சங்கையையே பிரபலமாகச் செய்து போருமவர்கள் ஸ்ரீபாஷ்யகார ஸம்ப்ரதாயஸ்தர்களாகக் கூடுமோ? "ஏகத்ர ஸமாப்தஸ்வரூபஸ்ய அந்யத்ர வ்ருத்தியோக்யத்வவாதோ வ்யுதஸ்யதே." என்று ஸ்ரீஸூக்தியிருந்தால் கீழே விவரிக்கப்பட்ட ஆக்ஷேபம் இன்னமும் ஜீவித்துக் கொண்டிருக்கலாம். ஸ்ரீஸூக்தியோ அப்படியில்லை. சங்கைக்கு (அதாவது ஆக்ஷேபத்திற்கு)க் கண்டனம் வந்து விட்டதாக ச்ருதப்ரகாசிகாசார்யர் நிஸ்ஸந்தேஹமாக ஸாதித்துள்ளார். அப்படி யிருக்கவும் இன்னமும் அந்த ஆக்ஷேபமே பிறருடைய மதத்தில் ஓங்கி நிற்கின்றது.

64. ஸர்வசக்திகனென்றும் விசித்ரசக்திகனென்றும் விலக்ஷண சக்திகனென்றும் அத்புத சக்திகனென்றும் ஆச்சர்ய சக்திகனென்றும் அகடித கடநா ஸமர்த்தனென்றும் பலபடியாக எம்பெருமானை உபநிஷத்துக்கள் புகழ்கின்றன. "பராஸ்ய சக்திர் விவிதைவ ச்ரூயதே" என்கிற உபநிஷத்வாக்யமொன்றே போதும். இவ்வத்புத சக்தியின் வைகரியைக் கூரத்தாழ்வான் ஸ்ரீவைகுண்ட ஸ்தவத்தில் ஒரு ச்லோகத்தினால் விவரித்தருளுகிறார் காண்மின்:

"கிம்ஸாதநஃ க்வ நிவஸந் கிமுபாததாநஃ கஸ்மை பலாய ஸ்ருஜதீச இதம் ஸமஸ்தம்,
இத்யாத்யநிஷ்டித குதர்க்கம் அதர்க்கயந்தஃத்வத்வைபவம் சருதிவிதோ விதுரப்ரதர்க்யம்."

இந்த ச்லோகத்தின் கருத்தாவது:—எம்பெருமானே ஸர்வஸ்ரஷ்டா என்னு மிடத்தில் பிறர் சில குசோத்யங்களைக் கூறுகின்றார்களாம்; உலகத்தில் ஸ்ருஷ்டி செய்பவர்கள் யாவரும் சில ஸஹகாரி காரணங்களோடு கூடியே படைக்கக் காணுகின்றோம். ஸர்வஸ்ரஷ்டாவான பரம புருஷனுக்கும் ஸஹகாரி காரணங்கள் இன்னவை யென்று காட்டவேணும். அப்படி காட்டா தொழியில் அவன் ஸ்ருஷ்டி கர்த்தாவென்பது அஸம்பாவிதமாகும். இதற்காகச் சில ஸஹகாரிகளை நிரூபிப்ப தானல், ஸஹகாரிகளான அப்பொருள்களைப் படைத்தது யார்? என்று கேள்வி வரும், ஈச்வரனே படைத்ததாகச் சொல்லுவீர்கள். அவற்றைப் படைக்கும்போது எவை ஸஹகாரிகளா யிருந்தன வென்று கேள்வி வந்தே தீரும். இப்படியே ப்ரச்ந பரம்பரை போய்க்கொண்டே யிருக்கும். கடைசியாக ஸர்வேச்வரனல் ஸ்ருஷ்டிக் கப்படாத சில பொருள்களுண்டென்று இசையவேண்டி வரும். ஆகவே பகவான் ஸர்வஸ்ரஷ்டா அல்லன் என்றதாகும். இப்படியே மற்றொரு கேள்வியு முண்டாகிறது; ஸ்ருஷ்டிக்கும்போது பகவான் எந்த இடத்திலிருந்து கொண்டு ஸ்ருஷ்டிக்கிறுன். ஒரு அதிகரணமின்றி ஸ்ருஷ்டிக்க முடியாதன்றே. அதிகரணமாக ஒரு தேசத்தைக் காட்டினல் அதைப் படைக்கும்போது எந்த இடம் அதிகரணமாயிருந்ததென்று கேள்விவரும். இப்படியே இவ்விஷயத்திலும் ப்ரச்ந பரம்பரைகள் சென்று கொண்டே போம். கடைசியாக, பகவானல் ஸ்ருஷ்டிக்கப்படாத ஒரு இடம் ஸித்தித்தே தீரும். இதனுலும் பகவான் ஸர்வ ஸ்ரஷ்டாவல்லன் என்றதாகும். இங்ஙனே மற்றொரு கேள்வியுமுண்டாகிறது. பிரபஞ்சத்தைப் படைக்கின்ற பரமாத்மாவுக்கு எது உபாதாந காரணமாகின்றதென்று கேட்கிறோம். கீழ் ஸஹ காரிகாரண விஷயத்திற் போலவே இது தன்னிலும் ப்ரச்ந பரம்பரையும் ஆபத்தியும் துல்யம். இனி, பகவான் என்ன பலனைக் கருதிப் படைக்கிறுனென்கிற கேள்வியு முண்டாகிறது. “ப்ரயோஜநமநுத்திச்ய ந மந்தோபி ப்ரவர்த்ததே” என்பராதலால் ஸ்ருஷ்டிக்கு ஒரு ப்ரயோஜனம் சொல்லியே யாகவேணும். அந்த ப்ரயோஜன மானது ஸ்ருஷ்டிக்கு முன்னே ஸித்திருதிருக்கவில்லை யென்று கொள்ளவேண்டிய தாகும். ஆகவே பகவான் அவாப்த ஸமஸ்தகாமன் என்கிற ஸித்தாந்தம் குலைந்த தாகும்—என்றிப்படியாகப் பிறர் செய்யும் குசோத்யங்கள் மேற்குறித்த ச்லோகத் தின் பூர்வார்த்தத்தால் அநுவதிக்கப்பட்டு; மேல் உத்தரார்த்தத்தில் ஒரே வார்த் தையால் ஸமாதானம் சொல்லப்பட்டுள்ளது. “த்வத்வைபவம் ச்ருதிவிதோ விதுः அப்ர தர்க்யம்” என்கிறவிதுவே ஸமாதான மாய்த்து. விசித்திர விலக்ஷண சக்திசாலி யான பகவான்திறத்தில் ப்ரபல ப்ரமாண ஸித்தமான அர்த்தங்களில் குசோத்யம் செய்வது தகாது என்கிறவிதுவே ஸமாதானமாக முடிந்து நின்றது.

65. ஸ்ரீமங்கிகமாந்த குருவரரும் அச்யுத சதகத்தில் இப்படியே கூறுகின்றார்; “புரிஸபஹாணஸரீரோ புவணணம் ஹோஸி அச்சுய உவாயாணம், ணிய ஸங்கப்பஸணஹோ வஹஸி ணிமீத்தத் தணம்வி அப்புயஸத்தீ=(ச்சாயா) புருஷ ப்ரதாதசரீரோ புவநாநாம் பவஸி அச்யுத! உபாதாநம், நிஜஸங்கல்ப ஸநாதோ வஹஸி நிமித்தத்வமபி அத்புதசக்திः.” என்றார். இதில் முடிவில் அத்புதசக்தி: என்றதே ஸாரம். பிறர் செய்யும் குசோத்யங்களை பகவானுடைய அத்புதசக்தியோகத்தை நிரூபித்தே நிரஸிக்கவேணு மத்தனை யென்று காட்டினராயிற்று. இப்படியெல்லாம் அருளிச்செய்கிற ஆசார்யர்களுக்கு

* ச்ருதேஸ் து சப்தமூலத்வாத் * என்கிற ப்ரஹ்மஸூத்ரமே வழிகாட்டியாக நிற்கிறது. பிறர் இந்த ஸூத்ரத்தை மேலெழுந்தவாரியாக நிர்வஹித்துவிட்டு; எம்பெருமானுடைய விசித்ரசக்தியை அபதார்த்தமாக எண்ணித் தள்ளிவிட்டுக் குத்ருஷ்டிகளைப் போலவே பூர்வபக்ஷங்களைச் செய்து போருகிறார்கள்.

66. * அந்தர் பஹிச் ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயணஸ் ஸ்திதஃ* என்று ச்ருதி ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கச் செய்தேயும், அணுவான வஸ்துக்களிலே பகவான் எப்படி உள்ளே வியாபிக்க முடியும்? என்கிற ஆக்ஷேபத்தைப் பிறர் வலிதாகச் செய்கிறார்கள். ஜீவாத்மாவோ அணுபூதன். நிரவயவமான அணுவஸ்துக்களுக்கு உட்புறம் கிடையாதாகையாலே உள்ளே வியாபிப்பதென்பது அணுவஸ்துக்களில் அஸம்பாவிதமன்றோ. ஆகவே * அந்தர் பஹிச் ச தத் ஸர்வம் * என்றவிடத்து தச்சப்தார்த்தத்தில் ஜீவாத்மாவை விலக்கியேயாகவேணும்; அயோக்யார்த்தத்தை ச்ருதி ப்ரதிபாதியாதன்றோ ? என்று அவர்கள் வாதிக்கிறார்கள்.

67. ஸித்தாந்திகளின் ஸமாதானம் யாதெனில்; ஸாவயவமான வஸ்துக்களுக்குத் தான் உட்புறமிருக்குமென்றும், நிரவயவமானவற்றுக்கு உட்புற மிராதென்றும் ஒரு பிரமாணமும் கூறுகின்றதில்லை. நிரவயவமான ப்ரதாநம் முதலியவற்றில் அந்தர்தேசம் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றதே. ப்ரதாநம் நிரவயவ மென்கிற பக்ஷத்தை ஸ்வாமியும் தத்வமுக்தா கலாபத்தில் “அவ்யக்தம் த்வந்மதேபி ஹ்யநவயவம்” என்கிற ஸ்ரீஸூக்தியால் தெரிவித்துள்ளார்.

68. நிரவயவமான வஸ்துக்களுக்கு அந்தர்தேச மில்லையென்று சொல்வதை விட்டு அணுத்ரவ்யங்களுக்கு அந்தர்தேசம் கிடையாதென்று சொல்லுகிறோ மென்றும், சேதநன் அணுத்ரவ்யமாகையாலே அவனுக்கு அந்தர்தேசமில்லை யென்பது பொருந்து மென்றும் பிறர் ஸாதிப்பதுதானும் அயுக்தம். * ய ஆத்மநி திஷ்டந் ஆத்மநோந்தரஃ* அணோரணீயாந் * இத்யாதி ச்ருதிகளாலும் *அணோரணீயாம்ஸம் * என்கிற கீதாவசனத்தாலும் சேதநனிடத்திலும் பகவானுக்கு அந்தர்வ்யாப்தி யுண்டென்று ஸ்பஷ்டமாக விளங்குகையாலே.

69. ஜிஜ்ஞாஸாதிகரண ச்ருதப்ரகாசிகையில் “ய ஆத்மநி திஷ்டந்நித்யுக்தே வேத்யாம் அக்நிஸ் திஷ்டதி - திலே தைலம் திஷ்டதி இதிவத் பஹிரபஹிஸ்ஸந்நிதி ஸாதாரண்யாத் தத்வைசத்யார்த்தந மாஹ—*ஆத்மநோந்தர இதி” என்றுள்ளது. இது ஆத்மாவினிடத்தில் அந்தர்வ்யாப்தி யுண்மையை நன்கு புலப்படுத்தா நின்றது. ஆத்மாவுக்கு அந்தர் தேசமுண்டென்று கொள்ளவேணு மென்பதை ஸ்ரீ பாஷ்யகார ஸ்ரீஸூக்தியும் விசதீகரிக்கின்றது: மேலேகாட்டிய கீதாவசனத்தில் * கவிம் புராண மநுசாஸிதாரம் அணோரணீயாம்ஸ மநுஸ்மரேத் யஃ* என்பதில் அணோரணீயாம்ஸம் என்பதற்குப் பொருளருளிச் செய்யாநின்ற பாஷ்யகாரர் “ஜீவாதபி ஸூக்ஷ்மதரம்” என்றுரைத் தருளினர். ஆத்மாவில் அந்தர்தேசம் உள்ளதாக இசையாவிடில் ‘ஜீவாதபி ஸூக்ஷ்மதரத்வம்’ எம்பெருமானுக்கு நிர்வஹிக்க இயலாதன்றோ. *ஜீவாதபி ஸூக்ஷ்மதரம்* என்றது ஜீவனிற் காட்டிலும் அபக்ருஷ்ட பரிமாண முடையவன் என்றபடியன்று ; அப்படியாகில் பகவானுக்கு விபுத்வஞ்சொல்லுகின்ற ச்ருதி

ஸ்மிருதிகள் பொருந்தாதே. ஆகவே ஆத்மாவினுடைய அல்ப தேசத்திலும் வியா பித்திருக்கின்றானென்பதே இங்குப் பொருளாகும்.

70. *மயி ஸர்வமிதம் ப்ரோதம் ஸூத்ரே மணிகணா இவ* என்பதனுலும் அணுவில் அந்தர் தேசம் ஸித்திக்கும். நூலில் ரத்னத்திரள் போல் ப்ரஹ்மத்தி னிடத்தில் சேதநாசேதநாத்மகமான ப்ரபஞ்சம் கோக்கப்பட்டிருப்பதாகச் சொல்லு கிறது இந்த ப்ரமாணம். ஆத்மாவில் அந்தர் தேசமிசையாவிடில் இது பொருந்தாது. இதில் பரப்ரஹ்மத்துக்கு ஸூத்ரஸ்தாநீயத்வம் சொல்லியிருப்பது உணரத்தக்கது.

71. ஸஹஸ்ரநாமத்தில் *அணுர் ப்ருஹத் க்ருசஸ் ஸ்தூலः* என்றவிடத்தில் அணுபதத்திற்கு பாஷ்யமருளிச் செய்யா நின்ற பட்டர் (பகவத்குண தர்ப்பணத்தில்) "அதிஸூக்ஷ்மதஹராகாச அவ்யக்த ஜீவாநுப்ரவேச ஸாமர்த்யாத் அணுः" என்றருளிச் செய்தார். இப்படிப்பட்ட ப்ரமாண கணங்களால் எம்பெருமானுக்கு அணுபதார்த்தங்களிலும் அந்தர்வ்யாப்தி அநபாயமென்பதும், ஒவ்வொரு பதார்த்தத் திலும் பரிஸமாப்ய வர்த்தமாநத்வமும் அவ்பாஹதமென்பதும் ஸித்தாந்திகளின் கொள்கையாக ஸித்தம். ப்ரஹ்மவ்யாப்தி பரிஷ்க்ரியா என்கிற வடமொழி நூலிலே இதனை விரியவுரைத்திட்டேன்; அங்கே விரிவு காணத்தக்கது. .... ... *

பகவத் வ்யாப்தி தத்வ நிருபணம் முற்றிற்று.

## 8. லக்ஷ்மீதத்வ நிஷ்கர்ஷ ஸாரம்

72. ஸாம்ப்ரதாயிக சர்ச்சைகளுள் பிராட்டியைப் பற்றின விசாரமே பிரபலமாக நிற்கிறது. எம்பெருமானுக்குப் போலவே பிராட்டிக்கும் ஜகத்காரணத்வ-விபுத்வ-மோக்ஷ ப்ரதத்வங்களுண்டென்கிற வாதம் இதர ஸம்ப்ரதாயஸ்தர்களின் திரளில் மலிந்துள்ளது. இவ்விஷயங்களில் இதுகாறும் அடியேன் எழுதி வெளியிட்டிருப்பது அபரிமிதம். வடமொழியிலும் லக்ஷ்மீதத்வ விநிர்ணயம், ஸ்ரீதத்வ சோதனம் முதலான நூல்களில் மிக விரிவான விசாரங்கள் செய்திருக்கிறேன். பிள்ளை லோகாசார்ய ஸ்ரீஸூக்திகளிலோ மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளிலோ இவ்விஷயங்களைப்பற்றி விரிவான சர்ச்சைகள் கிடையாது. சாஸ்த்ரார்த்த தத்து வத்தை வாதப்ரதிவாத முறையிலன்றிக்கே ஸாரமாக வெளியிட்டுள்ளார்களத்தனை. இதில் வாதப்ரதிவாத முறைகளை வளர்த்தி மிகவிரிவாக வரைந்தவர் ஸ்ரீமத் வேங்கட நாதார்யர். அவர் சதுச்ச்லோகீபாஷ்யத்தில் சில பக்ஷங்களை உத்க்ஷேபித்து "பஞ்சஸ்வேதேஷு பக்ஷேஷு சச்சி தேக: ப்ரமாணவாந்" [இந்த ஐந்து பக்ஷங்களுள் ஏதோவொரு பக்ஷம் ப்ராமாணிகம்] என்றார். இப்படி சொல்லுவதனால் ஸந் தேஹமோ விவாதமோ தீருவதற்கு வழியுண்டோ? இதை அவர் தாமே ஆலோசித்து உடனே என்ன ஸாதித்தாரென்றால் (மேலே குறித்த காரிகையின் உத்தரார்த்தம்) *ஸலக்ஷ்மீகஸ்ய ஸாம்ராஜ்யம் ஸர்வதா ஸுப்ரதிஷ்டிதம்* என்று ஸாதித்தார். இதன் பொருள் ஸ்பஷ்டமே. பிராட்டிக்கு எந்தப் பெருமை சொல்லுவதானாலும் தனிப் படச் சொல்லவேண்டா; பிராட்டியோடு கூடிய எம்பெருமானுக்கே சொல்லுவது தான் நிராபாதமானது—என்பது இதன் பொருள். லக்ஷ்ம்யாஸ் ஸாம்ராஜ்யம்

ப்ருதக் ந; லக்ஷ்மீ ஸமேதஸ்ய பகவத ஏவ ஸாம்ராஜ்ய ப்ரதிபாதநம் அக்ஷதம்—என்று தலைக்கட்டினாராயிற்று. அதற்குச் சார்பான விவரணமும் அவர்தாமே செய்தருளியுள்ளார். அதைச் சுருக்கமாக உபபாதிக்கிறேன்.

73. ஸ்வாமியின் சில்லரை ரஹஸ்யங்களை முன்னம் ஸேவித்தால் நல்ல தெளிவு உண்டாகும். ரஹஸ்யரத்னாவளீ யென்கிற ரஹஸ்யத்தில்,

> "ஸ்ரீமானான நாராயணனொருவனுமே ஸர்வ ஜீவர்களுக்கும் தஞ்சம்......ஸர்வஸ்வாமினீயாய் ஸர்வேச்வரனுக்கு சேஷமாய் ஸஹதர்மசாரிணியான பெரிய பிராட்டியார் இத்தலையில் வாத்ஸல்யாதிசயத்தாலும் அத்தலையில் வால்லப்யாதிசயத்தாலும் புருஷகாரமாய்க் கொண்டு இஜ்ஜீவர்களுக்குத் தஞ்சமாகிறாள்"

என்றருளிச் செய்து இதை ரஹஸ்யரத்நாவளீ ஹ்ருதயமென்கிற அடுத்த ரஹஸ்யத்தில் தாமே விவரித்தருளினார். உண்மையில் விவரணாபேக்ஷையேயில்லாத வாக்ய மன்றோவிது. இப்படி நிஸ்ஸந்தேஹமாக வருளிச்செய்தவிடங்கள் ஒன்றிரண்டல்ல; பலபல விடங்களுண்டு. சதுச்ச்லோகியில் மூன்றாவது ச்லோகத்தின் பாஷ்யத்தில் "மோக்ஷப்ரதே பகவதி முமுக்ஷூணாம் கடகதயா ஏஷா திஷ்டதீதி ஸர்வஸம்மதம்" என்றருளிச் செய்ததொன்று போதுமே. எம்பெருமான்தான் மோக்ஷமளிப்பவன்; அதனைப் பெறுவிப்பவளாகமாத்திரம் பிராட்டி இராநின்றாள்" என்பது இந்த ஸம்ஸ்க்ருத ஸ்ரீஸூக்தியின் பொருள். அதற்குமேலுள்ள ஸ்ரீஸூக்திகளும் பிராட்டிக்கு உபாயத்வமில்லையென்பதையே நிலைநாட்டுவன. 'அஸ்தி கர்மார்ஹபலதே பத்யௌ க்ருத்யத்வயம் ச்ரிய: நிக்ரஹாத் வாரணம் காலே ஸந்துக்ஷணமநுக்ரஹே" என்கிற ஸ்வாமியின் காரிகையானது கண்ணாடிபோல் விளங்கக் கண்டுவைத்தும் பிறர் மருள்வதே!

74. த்வயத்தில் பூர்வகண்டத்தில் பிராட்டிக்கு உபலக்ஷணத்வமா? விசேஷணத்வமா? என்று ஒரு விவாதத்தைக் கிளப்பிக்கொண்டு உபலக்ஷணத்வமென்று சிலர் சொல்லுவதாக வைத்து, அதைக் கண்டித்து விசேஷணத்வமே யுக்தமென்று ஸ்தாபிக்கப்படுகிறது ரஹஸ்யத்ரயஸாரத்தில். இது நம்முடைய பூர்வாசார்யர்களின் திருவுள்ளத்தைக் கண்டிப்பதென்று சிலர் மருண்டிருப்பதுண்டு. இது மிகத் தவறு. இங்கு பிராட்டிக்கு விசேஷணத்வமில்லையென்று ஒரு ஆசார்யரும் உரைத்ததில்லை. முமுக்ஷுப்படியில் த்வயப்ரகரணத்தில் "இப்போதிவளைச் சொல்லுகிறது புருஷகாரமாக" என்ற சூர்ணையின் வியாக்கியானத்திலே மணவாளமாமுனிகள்—"(புருஷகாரமாக) என்கையாலே உபாயவஸ்துவிசேஷணமாயிருக்கிற ஆகாரத்தையிட்டு இவளுக்கு மூபாயத்வத்தில் அந்வயம் சொல்லும் பக்ஷம் நிரஸ்தம்" என்றருளிச் செய்திருக்குமிடத்து விசேஷணத்வத்தைக் கண்டோக்தியாகவே யருளிச் செய்திருப்பது காண்க. இங்கு உபலக்ஷணத்வம் கொண்டாலும் விசேஷணத்வம் கொண்டாலும் வாசி சிறிதுமில்லை யென்பதை சாஸ்த்ர மர்மஜ்ஞர்கள் உணர்வர்கள். பிராட்டிக்குப் புருஷகாரத்வமுண்டு என்று இசைந்தானபின்பு அவளுக்கு உபாயத்வமுமுண்டு என்று வாய்திறக்க வழியே கிடையாது. உபாயத்வமாவது தானே கொடுக்க சக்தியுடைத்தாகை. அஃதிருக்குமாகில் புருஷகாரக்ருத்யத்திலே நின்று துவளவேண்டிய ப்ரஸக்தியே கிடையாதாகையால் நவீனர்களின் உத்வேலப்ரஸங்கமெல்லாம் உதறித் தள்ளப்பட்டன. இதை அடியேன் பல நூல்களில் விசதீகரித்

திருக்கின்றேன். ரஹஸ்யத்ரய ஸாரத்திற்கு சாஸ்த்ரஜ்ஞர்கள் யாரும் வியாக்கியான மெழுதவில்லை; ஸமீபகாலத்தில் சிறந்த சாஸ்த்ரஜ்ஞரான ஸ்ரீமத் பரமஹம்ஸ இஞ்சிமேட்டழகியசிங்கர் எழுதி வெளியிட்டுள்ள வியாக்கியானத்தில் உண்மை வெளிவந்துள்ளது. அந்த இஞ்சிமேட்டு ஸ்வாமி அடியேனுடைய க்ரந்தங்களைப் பூர்வாச்ரமத்திலும் உத்தராச்ரமத்திலும் பூர்த்தியாகக் கடாக்ஷித்தவராகையாலே நல்ல தெளிவுடன் எழுதியிருப்பதை ஸ்ரீராமாநுஜன் 183-லும் 208-லும் (அந்யத்ர ச பஹுத்ர) மிக விரிவாக வரைந்துள்ளேனாதலால் இங்கு விரிய வுரைத்திலேன். ... *

★ லக்ஷ்மீதத்வ நிஷ்கர்ஷஸாரம் முற்றிற்று. ★

## — முதல் பரிச்சேதத்தின் உபஸம்ஹாரம் —

75. ஆரியர்காள்! ப்ரக்ருதம் ஸ்ரீரங்கத்தில் நடைபெறும் தென்னாசார்ய ஸம்பிரதாய ஸபையின் பொன்விழாக் கொண்டாட்டத்திற்கு நீடூழி நினைவு மலராக அடியேன் வெளியிட விரும்பிய இந்நூலில் தென்னாசார்ய ஸம்ப்ரதாய தத்துவங்களை [வைதிக லௌகிக விஷயங்களில் ஒன்றுவிடாமல்] நிச்சேஷமாக எழுதி வெளியிட ஆவல் கொண்டிருக்கின்றேன். இன்னும் சில பரிச்சேதங்களில் தான் இந்நூல் முடிவுபெறும். தற்காலம் இந்த முதல் பரிச்சேதம்மட்டும் ப்ரக்ருத ஸந்தர்ப்பத்திற்கு உதவியாக வெளியிடப்பட்டது. முடிவில் ஒரு முக்கியமான விஷயம் தெரிவிக்க வேண்டியது அவசியமாகிறது. இப்போது பொன்விழாக் கொண்டாட்டத்திற்கு இலக்கான கோயில் தென்னாசார்ய ஸபை ஏற்பட்டு நம் தரிசனத்திற்கு எவ்வெவ் விதமான பணிவிடைகள் செய்துள்ளதென்பதை விளக்கி நான்கு பக்கங்கொண்ட ஒரு விளம்பரப் பத்திரிகை வெளிவந்திருப்பதைக் கண்டேன். அதனால் அனேக வுண்மைகளை உலகம் தெரிந்து கொள்ளும். எம்பெருமானுடைய விபவாவதார காலங்களில் விளைந்த பலவகைப்பட்ட க்ஷோபங்கள் போல அர்ச்சாவதாரங்களிலும் ஏற்பட்டுவருவது வியப்பன்று. அவற்றை இதிஹாஸ புராணங்களினால் நாம் தெரிந்துகொள்வது போல, இவற்றை நீதிமன்றத்து ரிகார்டுகளினால் உலகம் தெரிந்துகொள்ள வேண்டியதாகிறது. அதை அடியேன் இங்கு ஸாரமாகத் தெரிவித்து இந்த முதல் பரிச்சேதத்தை முடிக்கிறேன்.

76. ஸ்ரீரங்கம் தேவஸ்தானம் தென்கலைதிவ்யதேசங்களுள் தலையானதென்று இவ்வளவு மாத்திரமே உலகத்தாருக்குத் தெரியுமேயொழிய, அந்த திவ்யதேசத்தில் தென்கலையின் ஆதிக்யம் எப்படிப்பட்டது? இதர கலையார்கள் எவ்வெவ்விதமான சேஷ்டைகள் செய்து அந்த தேவஸ்தானத்தை ஆக்ரமிக்கப் பார்த்தார்கள்? அந்த சேஷ்டைகளின் பலன் எவ்விதமாகத் தேறியது?...என்றிப்படிப்பட்ட உள் விஷயங்கள் உள்ளபடி பலபேர்களுக்குத் தெரியாது. சென்னையில் பிரபல அட்வகேட்டாக விளங்கி த்வீபாந்தரங்களிலும் மிக்க பெரும்புகழ் பெற்றவரான ஸ்ரீஉவே. T. ரங்காசாரியார் அவர்கள் வாழ்ந்த காலத்தில், ஆங்காங்கு இதர கலையார்களால் கிளப்பப்பட்ட அனர்த்தங்களுக்குப் பரிஹாரத்தை நியாயஸ்தானம் மூலமாகத் தென்கலையார் அடைய முயன்றபோது மேலேசொன்ன T. ரங்காசாரியார் அவர்கள் பெரும்பாலும் பல கோர்ட்டுகளில் வாதித்து உண்மையை ஸ்தாபித்தவர்.

அவரோடு பழகிவந்து, அவருக்குப்பின் ஸம்பிரதாய வ்யவஹாரங்களைப் பல நீதி மன்றங்களில் ஒழுங்காக நடத்தி மிக்க வெற்றிப்புகழ்பெற்று விளங்கி வருகின்ற ஸ்ரீ உவே. V. N. வெங்கடவரதாசார்ய ஸ்வாமிகள் (வேதவிலாஸ், 4, எழும்பூர்.) ஸம்பிரதாய ஸம்பந்தமான வியாஜ்யங்களுள்ள ஸகல திவ்ய தேசங்களினுடையவும் ரிகார்டுகள் யாவற்றையும் நன்கறிந்தவர். அவர் ஸ்ரீரங்கம் தேவஸ்தான ஸம்பந்தமான வ்யவஹாரங்களில் ரிகார்டுகளிலிருந்து மிக முக்கியமாகவும் ஸாரமாகவும் எடுத்து நிரூபித்த விஷயங்கள் இதன்கீழ்ப் பிரசுரம் செய்யப்படுகின்றன. இவற்றில் மாறுபாடு இருப்பதாக யாருக்காவது ஸந்தேஹமுண்டானல் அஸலான கோர்ட்டு காபிகளையே அப்படியப்படியே அச்சிட்டு வெளியிடுவோம். இங்கு வெளியிடப்படும் விஷயங்கள் அவ்வளவும் ஸத்யமானவை. பிறருடைய வுள்ளமு மறிந்தவை.

## ஸ்ரீரங்க தேவஸ்தான வ்யவஹாரஸாரம்.

77. ஸ்ரீரங்கம் தேவஸ்தானம் ஈஸ்டு இண்டியா கம்பெனியார் மானேஜ்மெண்டில் இருந்தபோது கோவில் அதிகாரியான வேலு என்பவர், கலெக்டர் வாலஸ்துரைக்கு தென்கலை வடகலை தகராறுகளைப்பற்றி 15—8—1803ல் எழுதினர். (அதாவது)—

"இதுநாள்வரை ஏற்பட்ட மாமூல்படிதான் கோவில் காரியங்கள் நடக்க வேணுமென்று ஸமூகம் உத்தரவு. அந்த மாமூல்படியே தென்கலை வேதாந்தாசார் திருநக்ஷத்ரதினமும் தென்கலையார்கள் சடங்குகளை நடத்தியிருக்க, வடகலையார்கள் மாமூலுக்கு விரோதமாக ராமாநுஜ தயாபாத்ரம் என்கிற மந்திரத்தைப் புதிதாகச் சொல்ல ஆரம்பித்தவுடன் தென்கலையார்கள் இது நூதனச்செயலென்று ஆக்ஷேபித்தும், அவர்களில் சில ஸன்யாசிகள் இந்த அநீதிச்செயல் அவமானகரமென்று சொல்லி எழுந்துபோயும் .......வடகலையாரில் 3, 4 பேர்கள் துஷ்டர்கள் கம்பெனியார் ஆளுகைக்கே பயப்படாமல் நூதன கார்யங்கள் செய்யத் துணிகிற படியால் மாமூலுக்கு விரோதமாக நடப்பவர்கள் தண்டிக்கப் படுவார்கள் என்று தண்டோரா போடவேண்டும்"—என்று எழுதினர்.

78. மத்யஸ்தரென்று ரிகார்டுகளில் வழங்கப்படுகிற ஷை வேலு மறுபடி 13—9—1803ல் எழுதுகிறார்—சில வடகலையார்கள் தன்னிடம் மனுக் கொடுத்துக் கொண்டிருப்பதாகத் தெரிவிக்கிறார்—(அதாவது)

"முன்காலம்முதல் இதுவரை தென்கலையாரே கோவிலில் எல்லாவிதமான பாத்யங்களையும் ஏகதேசமாக அனுபவித்து வந்திருக்கிறார்களே; தற்போதைய கம்பெனியார் ஆளுகையில் எங்களுக்கும் சில பார்த்யங்களாவது நீங்கள் ஏற்படுத்திக் கொடுக்கக்கூடாதா? என்று கேட்கிறார்கள்." என்று.

79. இதிலிருந்து தென்கலையாருக்குத் தான் கோவிலில் எல்லா பாத்யங்களும் ஏகதேசமாகவுண்டென்று வடகலையார்களே ஒப்புக் கொணடதாகத்தேறுகிறது.

80. பிறகு 23—4—1808ல் ஜில்லா கோர்ட் ஜட்ஜ் லாதாம்துரை தீர்ப்பு:—

"தென்கலையார்களே ஸ்ரீரங்கம் ஸப்தப்ராகாரத்துக்குள் ஸ்வாமிக்குச் செய்யப்படும் எல்லாச் சடங்குகளிலும் ஸர்வாதிகாரிகளென்றும் இக்கோவிலிலுள்ள

எல்லாத் திருமண்களும் தென்கலையா யிருப்பதாலும் மற்றகாரணங்களாலும் தெளிவாயிருக்கிறதென்றும், தென்கலையாருக்கே கோயில் ஸப்தப்ராகாரம் ஏற்பட்டதென்றும், வடகலையார்களை அந்த ப்ராகாரங்களுக்குள் குடியிருக்க அனுமதிக்கப்பட்டதானது தென்கலையார்கள் சொல்படியே அவர்கள் வீட்டிலும் கோவிலிலும் அத்யாபக வேத பாராயண எல்லாச் சடங்குகளையும் நடத்த ஸம்மதித்ததின் பேரில் தான் என்பது வ்யக்தமாகிறது. அனேக ருஜுக்களால் கோவிலில் தென்கலையார்களின் ஆதிபத்யம் ஊர்ஜிதமாகிறது. வெகுநாளாக தென்கலையார்களே அநுபவித்து வந்த பாத்யங்களில் வடகலையார் எவ்விதத்திலாவது தலையிட்டுத் தடுத்தார்களானால் அவர்களை சரீரசிக்ஷை, ஸப்தப்ராகார பஹிஷ்காரம், அல்லது சிறைக்கு உள்ளாக்க வேண்டும்.''

[இவ்விதமாக ஜில்லா ஜட்ஜ் தீர்ப்பு.] இதற்கு அஸல் இங்கிலீஷ் காபிகாண்மின்.

## JUDGMENT OF DISTRICT JUDGE, (LATHAM) TRICHINOPOLY.

Dated 28—4—1808

81. "The Thengaliars were recognised to be the dictators of the ceremonies within the Sapthaprakaram to Srirangam Swami's Koil and the Court is confirmed in this opinion from the circumstance of the Thengalai Thiruman being affixed upon the forehead of the Swami, the mantapam, the Koil and the Garuda Cambum the Sapthaprakarams were successively built for Thengalais and not for Vadagalais who appear to have been admitted from time to time to reside within the Sapthaprakaram under the condition of not giving any interruption to the ceremonies dictated to be performed by the Thengaliars and to their consenting that the Thengaliars were to perform the Nanmai, Theemai (நன்மை, தீமை) Ceremonies either as Adyapakas or Vedaparayanakars.

* * * * *

82. It is decided that the Thengaliars be CONFIRMED in their superiority over the Vadagaliar of the Srirangam Swami Koil in the Sapthaprakaram and that they be the dictators in all the ceremonies to be performed to the Swamis therein and they alone have the right of performing Nanmai, Theemai ceremonies in the houses of Vadakalais.

83. The Defendants and Vadakaliars are to understand, that if they attempt to interrupt the Thengaliars in any of the previous privileges confirmed to them that the judge in his magisterial capacity will either cause to inflict corporal punishment on the back of such offenders and banish them out of the Sapthaprakaram or commit them to the prison for trial before the circuit judge."

84. ஸமீபகாலத்தில், அர்ச்சகர்களின் நமஸ்கார கேஸில் ஸப்கோர்ட்டு ஜட்ஜ்மெண்டில் அப்பீலதிகாரியான ஜட்ஜ் எழுதுகிருர்—

"இவ்வளவு வ்யக்தமாயும் ஸுஸ்பஷ்டமாயும் கோவில் வழக்கத்தை நிர்த்தாரணம் செய்து, நூறு வருஷங்களுக்கு மேற்பட்ட காலமாக எல்லாக் கோர்ட்டாராலும் ஒத்துக் கொள்ளப்பட்ட இவ்வளவு மிக புராதனமான ஒரு தீர்ப்பை ஒருவிதத்திலும் நிராகரித்தல் முடியாதது." என்று.

85. மேலே கண்ட 1808ஞு ஜில்லா ஜட்ஜ் தீர்ப்பை ரத்து செய்து கொள்ள வடகலையார்கள் அந்த தேதி முதல் தீவிரமான முயற்சிகள் செய்தும் அந்த தீர்ப்புக்கு இன்னமும் பலமே ஏற்பட்டு வருகிறது.

(86.) 14—12—1835. அப்பீல் கோர்ட்டு—

நிஸ்ஸந்தேஹமான தென்கலையாரிட ஏகதேசபாத்யம்—

"வடகலையார்கள் மிகவும் பிடிவாதத்துடன் சட்டத்தைமீறி தென்கலையார்களின் பாத்யத்தை நிராகரித்து வருகிருர்கள். அவர்களின் அபிப்ராயம் என்னவென்ருல், ஓயாமல் ஹிம்ஸித்துத் தொந்தரவு செய்து வந்தால் தென்கலையார்கள் பலஹீனர்களாய் தங்கள் பாத்யத்தை யெல்லாம் விட்டு விட்டு ஓடிவிடமாட்டார்களா என்பதுதான். தென்கலையார்கள் நிராக்ஷேபணையாக தங்கள் பாத்யங்களை அநுபவிக்க வேண்டிய ஸௌகர்யம் செய்து கொடுப்பதுடன் சட்டத்தை மீறி நடப்பவர்களுக்கு சரியான புத்தி கல்பிக்க வேண்டும்."

87. 13—4—1820ல் கலெக்டர் உத்தரவு—

"கோவிலில் சாஸ்த்ர ஸந்தேஹம் ஏற்பட்டால் சாஸ்த்ரஜ்ஞர்களாய் தென்னுசார்ய ஸம்பிரதாயஸ்தர்களாயிருப்பவர்களையே கலந்து கொள்ளவேணும்."

88. 1822ல் வடகலையாரில் சிலர் 1808ல் தோன்றிய [முன்னம் உதஹரிக்கப்பட்டிருக்கிற] ஜில்லா ஜட்ஜ் தீர்ப்பை மீறி நடந்து கொண்டார்களென்கிற குற்றத்திற்காக அவர்களை ஆர்யபட்டாள் வாசலுக்குள் விடாமலிருக்க உத்தரவிட்டு நன்னடத்தை ஜாமீன் வாங்கி, பிறகு உள்ளே விடப்பட்டார்கள்.

89. 1829ஞு முதல் பலதடவை ஸ்ரீமத் அஹோபிலம் ஜீயர் ஸ்ரீரங்கம் எழுந்தருளினபோது நிசான் சுருட்டி முதலான எடுபிடி ஸாமான்கள் தெருவிலே கொண்டுவரப்படுகையில் தடையுத்தரவு ஏற்பட்டிருக்கிறது. ஸ்வஸ்திவாசகம் மாத்திரம் தென்கலை ஸ்வாமிகளைக்கொண்டு செய்துகொள்ள அநுமதியளிக்கப்பட்டது.

90. 1874ஞு பென்னிங்டன் ஜட்ஜிமெண்டு-கொடியாலம் ரங்கஸாமி ஐயங்கார் ஸ்ரீரங்கதேவஸ்தானத்தைச் சேர்ந்த தென்கலை வேதாந்தாசாரியாருக்கு நூதனமாக வடகலை நாமமிட்டு விக்ரஹத்தை ஏள்ளப் பண்ணிவைத்த குற்றத்தின் பேரில் தோன்றிய இந்த ஜட்ஜ்மெண்டின் ஸாராம்சம்—

"வடகலையார்கள் துராகிருதமாய் 1808ஞு தீர்ப்பை நிராகரிக்கவே வழிதேடி வருகிருர்கள். இங்கே தென்கலையாருடைய பாத்தியம் நிஸ்ஸந்தேஹமாயும் புராதன

மாயுமிருக்கிறது. 1863ஸு வரை கோவிலிலுள்ள எல்லாத் திருமண்களும் (அதாவது) மதிள்கள் சுவர்கள் பாத்ரங்கள் எடுபிடிசாமான்கள் பிம்பங்கள் ஆகிய எல்லாவற்றிலுமுள்ள எல்லா நாமங்களும் அப்போது லிஸ்டு எடுத்ததில் ஏகதேசமாய் தென்கலை நாமங்களே யென்று தெரியவருகிறது. தேசிகருக்கு இட்ட வடகலை நாமம் துராகிருதமாயும் சட்ட விரோதமாயும் வழக்க விரோதமாயும் தெரிகிறது. தென்கலையார் மனதை புண்படுத்தவேணுமென்கிற கெட்ட எண்ணங்கொண்டே தேசிகர் நாதமுனி விக்ரஹங்களை புதிதாக வடகலை நாமமிட்டு ஏள்ளப்பண்ண (கொடியாலம்) ரங்கஸாமி ஐயங்கார் ஏற்பாடு செய்தார். இந்த குற்றத்திற்கு ரூபாய் ஆயிரம் அபராதம். கட்டத்தவறினால் 6மீ தண்டனை."

91. இது ஹைகோர்ட்டுவரை அப்பீலில் காயம் செய்யப்பட்டது.

அதற்குப்பின் சிலவருஷங்கள் கழித்து, வடகலைநாமமிட்ட தேசிகநாதமுனி விக்ரஹங்களை ஏள்ளப்பண்ணவேண்டுமென்று பிறரால் கொண்டுவரப்பட்ட 4 கேஸ்கள் ஹைகோர்ட்டு வரையில் வந்து தள்ளப்பட்டன. 1808ஸு தீர்ப்புப்படி கோவிலிலிருக்கும் எல்லா ஸ்வாமிகளுக்கும் தென்கலையாசாரப்படி பூஜாகார்யங்கள் செய்ய வேண்டியதென்கிற தீர்ப்புகளுக்கு விரோதமாகவே வடகலையார்கள் கேட்டுக் கொள்ளுகிறார்கள். இப்படி செய்யக்கூடாதென்று ஹைகோர்ட்டு தீர்ப்பில் கண்டிருக்கிறது.

92. 1894ஸுத்தில் சேஷராயர் மண்டபத்திலிருந்த தென்கலைத் திருமண்களில் பாதங்களை உளியால் வெட்டி மாறுபடுத்த வடகலையார்கள் ப்ரயத்தனம் செய்தார்கள். இது அவர்களுடைய துராகிருதம் என்று தீர்மானம் செய்து........இன்னும் அனேக வியாஜ்யங்களும் தோன்றி வடகலையார்க்கு மூன்றுமாத தண்டனையும் 100 ரூ. அபராதமும் விதிக்கப்பட்டது.

93. ஸ்ரீரங்கம் சித்திரை வீதியில் ப்ரைவேட்ஹவுஸ்ஸில் கட்டப்பட்ட தேசிகர் கோவிலிலுள்ள விக்ரஹத்தை வடகலை நாமத்துடன் வீதிகளில் கொண்டுவரக் கூடாதென்று மாஜிஸ்டிரேட் செய்த உத்தரவின்மேல் 1909ஸு வியாஜ்ஜியம். திருவேந்திபுரம் கேஸில் மணவாள மாமுனிகள் விக்ரஹத்தை பப்ளிக் தெருவில் ஏள்ளப்பண்ணலாமென்று ப்ரிவிகௌன்ஸிலில் எப்படி ஏற்பட்டதோ, அப்படியே ஸ்ரீரங்கத்தில் வெளிதேசிகர் விக்ரஹத்தை வீதியில் ஏள்ளப்பண்ணுவோமென்று வடகலையார் வாதித்தார்கள். இந்த தாவாவில் எல்லா தஸ்தாவேஜுகளும் தாக்கல் செய்யப்பட்டு பரிபூர்ணமான பரிசீலனை நடந்ததில் (மேலே காட்டிய) 1808ஸு தீர்ப்பு ஊர்ஜிதம் செய்யப்பட்டது. "இங்கே தென்கலை ஆதிக்யம் புராதனம்; வடகலையார் நாளடைவில் ஆக்ரமிக்க வந்தவர்கள்; கோவில் சடங்குகளெல்லாம் தென்கலைபரம்; நாமங்கள் யாவும் தென்கலை. சில வெளிச்சுவர்களில் கொஞ்சம் கொஞ்சமாக வடகலைநாமம் போட ஆரம்பித்தார்களே யொழிய புராதனமில்லை" என்று எழுதப்பட்டிருக்கிறது.

94. ஸு1907 ஸ்ரீரங்க நாராயணஜீயர் வாதி; அவருடைய பாத்யத்தைப்பற்றின வியாஜ்ஜியம். இதில் முடிவு;—கோவில் சடங்குகள் எல்லாம் தென்கலை; பூஜாவிதி எல்லாம் ஜீயர் மேல்விசாரணை கர்த்தர் என்று முடிக்கப்பட்டது.

வடகலே வேதபாராயணக் கேஸ் தோன்றினபோது முன்னம் குறித்த 1808ஸ்ரீ லாதாம் துரையின் தீர்ப்புதான் கோவில் ஆசரணேயை நிர்த்தாரணம் செய்தது.

95. வெகுகாலம் நடந்துவந்த அர்ச்சக நமஸ்கார வ்யாஜ்ஜியத்தில் ஜட்ஜ்மெண்டு—(16—1—53)

"மேலே குறிக்கப்பட்ட தஸ்தாவேஜுகளிலிருந்து 1808க்கு வெகுநாள் முன்னமே பிடித்து தென்கலேயார் ஆதிக்யமே. ஒவ்வொரு விவஹாரத்திலும் தென்கலேயார் பாத்யமே நிலேநின்றது. அர்ச்சகர்கள் தென்கலேயாசாரத்திற்கு அனேக விதத்தில் கட்டுப்பட்டிருக்கிறார்கள். தென்கலே நாமங்களே மிகவும் விசேஷமாயும் அதிகமாயும் உள்ளது. ஸ்ரீசைலேச தயாபாத்ரம் ஏகச்சத்ராதிபத்யமாய் நிராக்ஷேபமானது. பஞ்சாங்க படனம், கத்யத்ரயபடனம், கைசிக புராணபடனம், ஆயனர் படிப்பு, அத்யாபக கைங்கரியம் எல்லாவற்றிலும் ஸ்ரீசைலேசபாத்ரம் தென்கலேவாழி திருநாமம் இதுகள் நிராக்ஷேபணேயான வழக்கம். மிராசு ஆபீசுகளெல்லாமும் எல்லா மரியாதைகளும் தென்கலேயாருக்கே; இதுகளிலிருந்து கோவில் ஆசரணே தென்கலேயென்பது ஸுஸ்பஷ்டம். வக்கீல் ஸ்ரீனிவாஸய்யர் [டிரஸ்டிகளில் ஒருவர்] தென்கலே வடகலே கலஹங்களில் கலந்தவரல்ல; பிரபல வக்கீல். இவரது அபிடவிட்டு மிகுந்தகௌரவத்துடனேற்றுக் கொள்ளத்தக்கதே."

96. மேலே தெரிவித்த ரிகார்டுகள் தவிர இன்னும் நூற்றுக்கணக்கான ரிகார்டுகள் ஸ்ரீரங்கத்தில் தென்கலேத் திருமணும் தென்கலே யாசாரமுமே புராதனம் என்று நிர்த்தாரணம் செய்யக் கூடியவைகளாயிருக்கின்றன. அவையெல்லாம் தனிப்புத்தகமாக வெளிப்படுத்த வேண்டியவை.

97. இந்த ஸ்ரீரங்கம் கோவிலில் வடகலேயார்கள் தங்களுக்கு ஸாதகமாக ஒரு விஷயம் சொல்லக் கூடும்; அதாவது—வடகலே நாதமுனி ரெங்கையங்கார் தந்வந்தரி கோவிலில் வடகலேநாமம் போட்டதற்காக கீழ்க்கோர்ட்டில் அவர்க்கு ஆயிரம் ரூபாய் அபராதம் விதிக்கப்பட்டிருந்தது; அது ஹைகோர்ட்டில் ஒரு டெக்னிகல் பாயிண்டில் ரத்து செய்யப்பட்டது. இந்த விஷயத்தை வடகலேயார்கள் தங்களுக்கு அநுகூலமாகச் சொல்லிக் கொள்ளலாம். இந்த கேஸில் வடகலேநாமம் போடலாமென்று தீர்ப்பு செய்யப்படவில்லே. அது தப்பு என்றுதான் முடிக்கப்பட்டிருக்கிறது. ஆனல் "இந்த கேஸ் சட்டமுறைப்படி நடத்தப்படவில்லே" என்கிறவொரு லாபாயிண்டின் கீழ் அபராதம் தள்ளுகடையாயிற்று. இதனல் ஒரு ஸாதகமுமில்லே.

98. கொடியாலம் ரங்கஸாமி ஐயங்கார் தென்கலே வேதாந்தாசாரியருக்கு வடகலே நாமமிட்டு வெளியில் கொண்டு வந்த குற்றத்திற்காக ஆயிரம் ரூபாய் அபராதம் விதித்த ஜட்ஜ்மெண்டில் ஷை தந்வந்தரி கோவில் திருமண் கேஸில் அபராதம் ரத்து செய்யப்பட்டதானது சோசனீயமென்றும், அதனல் தான் வடகலேயார்களுக்கு துராகிருதம் செய்வதில் உற்சாகமுண்டாயிற்றென்றும் காட்டப்பட்டிருக்கிறது.

99. ஸ்ரீரங்கத்தைப்பற்றி ரிகார்டுகள் ஸம்பந்தமாகத் தெரிவிக்க வேண்டிய விஷயங்கள் பாரத ராமாயணங்கள் போலே யிருந்தாலும் தற்காலம் இவ்வளவு போதும்.

☞ ஸ்ரீரங்கம் தேவஸ்தான வ்யவஹார ஸம்பந்தமாக மேலே விவரிக்கப் பட்டிருக்கிற விஷயங்கள் ஷை கோவில் ரிகார்டுகளிலிருந்து நான் எடுத்துக் கொடுத்தவையே. நான் நிரூபித்துக்கொடுத்தபடியே இங்கு அச்சிடப்பட்டிருக்கிறது.

(Sd.) V. N. VENKATAVARADACHARI,

Advocate, Vedavilas, Madras-8.

## — முடிவான விண்ணப்பம் —

100. எந்த விஷயமும் ஒருவகையான க்ஷாத்ரபுத்தியோடு நாம் தெரிவிப்பதில்லை. எடுத்துக்காட்டப்படும் விஷயங்களில் அஸஹிஷ்ணுதை கொண்டவர்கள் விபரீதமாக நினைத்தாலும் ப்ராமாணிகர்களாய் நடு நிலையில் மனத்தை வைத்துப் பார்ப்பவர்கள் எவரும் அப்படி நினையார். அடியேன் எந்த விஷயம் தெரிவித்தாலும் ப்ரமாணோப பத்திகளைக் காட்டாமல் மனம்போன போக்கில் தெரிவிப்பதில்லை யென்பதை இதர மதஸ்தர்களும் தெரிந்துகொண்டிருக்கிறார்கள். "பொய்யிலாத மணவாளமா முனி புந்தி வாழி புகழ் வாழி வாழியே" என்று உள்ளங்குளிர நிச்சலுமநுஸந்திக்கு மடியேன் அவ்வநுஸந்தான பலத்தினல் பெற்ற பரிசு இது - என்பது அந்த:கரண ஸாக்ஷிகமானது. இதற்குமேல் இரண்டாவதுபரிச்சேதத்தை எதிர்பார்த்திருக்க....*

ஸ்ரீ மதே ரம்யஜாமாத்ருமுநீந்த்ராய மஹாத்மநே.

ஸ்ரீ ரங்கவாஸிநே பூயாத் நித்யஸ்ரீர் நித்யமங்களம்.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம்
அண்ணங்கராசாரியர் எழுதிய
ஸத்ஸம்ப்ரதாய ஸாரார்த்தரக்ஷையில்
முதல் பரிச்சேதம்
முற்றிற்று.